சுதேசமித்திரன்

வாரப்பதிப்பு

சுபானு வருஷம் தை மாதம் 24உ (6-2-'44)

# புரட்டு மூட்டை

அதிகார வர்க்கத்தின் கண்களுக்குக் குற்றவாளிகளாகத் தோன்றும் தலைவர்களை ஒருபுறம் மடக்கி ஒதுக்கி வைத்துவிட்டு சர்க்கார் தங்கள் புரட்டுப் பிரசார மூட்டையிலிருந்து ஒவ்வொன்றாக அவிழ்த்து விடுகின்றனர்! அந்த இனங்களில் "காங்கிரஸ் தலைவர்களில் சிலர் நேசக்கட்சியினருக்கு உதவி செய்ய முடியாது என்பதுடன் நில்லாமல் ஜப்பானியர்களுடன் நட்பு கொள்ள முற்பட்டார்கள். 1942-ம் வருஷம் ஆகஸ்ட் மாதம் 8-ந் தேதிய தீர்மானம் அவர்களது முயற்சியால் நிறைவேறியது" என்பதும் ஒன்று. இதைப் போன்ற கேவலமான கூற்று வேறொன்றுமே இருக்க முடியாதென்பதை காங்கிரஸ் தலைவர்களின் மனோபாவத்தை நன்கறிந்த இந்தியர் அனைவரும் அறிவர். ஆனால் தங்கள் செய்கைக்கு நியாயம் தேடி உலகத்துக்கு சமாதானம் சொல்ல வேண்டுமென்று நினைக்கவே அதிகார வர்க்கம் அப் பிரசாரத்தில் ஈடுபட்டது ஆச்சர்யமல்ல. காங்கிரஸ் காரியக்கமிட்டியில் 20 ஆண்டுகளுக்கு மேல் தொடர்பு கொண்டு வரும் ஸ்ரீமதி ஸரோஜினி தேவி இந்தப் புரட்டுகளை மறுத்து சமீபத்தில் உண்மையை உடைத்துக் கூறியிருக்கிறார். இந்தியர் சம்பந்தப்பட்ட வரை உண்மை இன்னதெனத் தெரியவேண்டியதில்லை. தெரிந்தது தான். ஆனால் அவர் அந்நியநாட்டுப் பத்திரிகைப் பிரதிநிதிகள் அநேகர் அடங்கிய மகாநாட்டில் காங்கிரஸ் மீது சர்க்கார் சுமத்தும் பழியை அணு அணுவாக அலசிப் பதில் சொல்லியிருக்கிறார்.

யுத்தத்தில் இன்று ஈடுபட்டிருக்கும் நேசத் தலைவர்கள் பாஸிஸத்தை எதிர்த்துத் தகர்க்க உறுதிகொள்ளும் முன்னரே அந்த பாஸிஸ முறை விஷம் போன்றதென்பதை நேருவும் நம் நாட்டு மற்ற தலைவர்களும் நெடு நாளாக எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். அதிகார வர்க்கம் இதை மறப்பதற்கில்லை; ஆனால் இப்போது நேருவும், அவரது ஸகாக்களும் திடீரென்று அச்சு நாட்டினரிடம் மோகம் கொண்டு விட்டதாக திரிப்பதுதான் திரிசமன். கண்ணியமற்ற பிரசாரம். காங்கிரஸின் நோக்கத்தை மகாத்மா பன்முறை எடுத்துச் சொல்லியிருக்கிறார். அதையே அவர் ஸ்ரீமதி மீராபென்னுக்கு எழுதிய கடிதத்திலும் குறிப்பிட்டிருந்தார். காந்திஜீ உண்ணாவிரதத்தின் போது, சர்க்காரின் பிரசார கீதம் மேல் ஸ்தாயிக்குப்போயிற்று. அப்போது ஸ்ரீமதி பென், இக் கொடுந்தவறைத் திருத்தும் பொருட்டு மகாத்மா தமக்கெழுதிய கடிதத்தை ராஜப் பிரதிநிதிக்கு அனுப்பினார். நேர் வழியில் சர்க்கார் சென்றிருந்தால் அக்கடிதம் கண்டவுடன் அதை வெளியிட்டிருக்க வேண்டும். தவறை நியாயமென்று காட்டுவதற்கு தவறே மாற்றல்ல. 'ஆட்சி வர்க்கத்தின் செய்கை தவறு. தலைவர்களை விடுவித்து விசாரிக்கவேண்டும். அதே சமயத்தில் சர்க்காரையும் விசாரிக்கவேண்டும்' என்றார் ஸ்ரீமதி ஸரோஜினி. இதைக் கவனிக்காமல் சர்க்கார் மேலும் தங்கள் பாணப் பிரயோகத்தில் நாட்டம் செலுத்துகின்றனர்.

ஸ்ரீமதி பென் வைஸ்ராய்க்கு எழுதினார் என்பது ஸ்ரீமதி ஸரோஜினி இப்போது சொல்லித்தான் தெரிகிறது! அதைச்சொல்லாததுடன் ஸ்ரீமதி ஸரோஜினி தேவி தெரிவித்த கருத்துக்களை முன் தணிக்கையின்றி பிரசுரிக்கக்கூடாது என்று டில்லி சீப் கமிஷனர் ஒருவிநோத உத்தரவுபோட்டு விட்டார். 1942-ல் பத்திராதிபர்களுக்கும் சர்க்காருக்கும் பரஸ்பரம் ஏற்பட்ட நேர்மையான திட்டத்துக்கு இந்த உத்தரவு ஒரு உலை! இதில் கூட பாரபட்சம்! உத்தரவு ஆங்கிலோ இந்தியப் பத்திரிகைக்குப் பொருந்தவில்லை. நேரானகொள்கையையோ, சீரான ஒருதரப்பட்ட முறையையோ சர்க்கார் பின்பற்றவில்லை என்பதற்கு இது ஒரு சமீப உதாரணம். மனப்போக்குப்படி யதேச்சையாக நடக்கலாம் என்ற எண்ணம் மேலோங்கிவிட்டது தெளிவு.

"நமது நோக்கம், நம்முடைய உரிமைகளைக் காத்

—அடுத்த பக்கம்





# சென்ற வார நிகழ்ச்சிகள்

## ஸ்ரீமதி ஸரோஜினிக்கு விதித்த தடை

ஸ்ரீமதி ஸரோஜினி தேவிக்கு கூட்டங்கள், ஊர்வலங்கள் முதலியவற்றில் சம்பந்தம் கூடாதென்றும், பத்திரிகைகளுக்கு அறிக்கை விடுக்கக் கூடாதென்றும் விதித்த உத்தரவு பற்றி விவாதிக்கவேண்டுமென வரப்போகும் மத்திய சட்டசபைக் கூட்டத்திற்கு சபையின் உபதலைவர் ஸ்ரீ ஏ. ஸி. தத்தா ஓர் அவசரப்பிரேரணைக்கு நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்.

* * * *

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

துக்கொள்வது தான். எந்த இடத்திலிருந்து யார் தலையிட்டாலும் நாம் அதை எதிர்த்து நின்று போராட வேண்டும்" என்று சென்னையில் நடந்த அகில இந்திய பத்திரிகை ஆசிரியர் மகாநாட்டில் ஸர் பிரான்ஸிஸ் லோ தெளிவாக்கினார். ஆகவே இப்போது பிறந்திருப்பது போன்ற உத்தரவுகளையெல்லாம் சகித்துக்கொண்டிருப்பதற்கில்லை. நல்லுறவைத் தேடிக் கொள்வதற்குப் பதிலாக ஒவ்வொரு அம்சத்திலும் சர்க்கார் கசப்பையே சம்பாதித்துக் கொள்கின்றனர்.

இந் நிலையில் மத்திய சட்டசபைக் கூட்டம் ஆரம்பமாகிறது. சர்க்கார் செய்கையின் விபரீதத்தை உண்மையான ஸ்வரூபத்தில் அங்கு எடுத்துக்காட்டுவது கடமை. எஞ்சியிருக்கும் பிரதிநிதிகள் அதைச் செய்வாரென நம்புகிறோம்.

---

## ஆசிரியர் பன்ஸாலி கைதி

சுயேச்சை தினத்தன்று ஆசிரியர் பன்ஸாலியும் மற்றும் எட்டு பேர்களும் உத்தரவை மீறி ஊர்வலம் நடத்தியதற்காக கைதி செய்யப்பட்டதாக வார்தா செய்தி கூறுகிறது.

வார்தா ஜில்லா மாஜிஸ்திரேட் சுயேச்சை தின சம்பந்தமான கூட்டங்களோ, ஊர்வலங்களோ நடத்தக் கூடாதென ஓர் உத்தரவிட்டிருந்தார்.

* * * *

## கோபிநாத் பர்டோலாய் விடுதலை

அஸ்ஸாம் மாஜி பிரதம மந்திரி ஸ்ரீ கோபிநாத் பர்டோலாய் 1942 ஆகஸ்ட் மாதம் கைதி செய்யப்பட்டார். அவர் இப்போது தேக அசௌக்கியம் காரணமாக விடுதலை செய்யப்பட்டார். சிறை வாயிலில் அவருக்கு ஒரு உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. அதில் அவர் கௌஹாத்தி முனிஸிபல் எல்லையை விட்டுப் போகக்கூடாதெனச் சொல்லப்பட்டிருந்தது.

* * * * *

## ஸ்ரீ சித்வா விடுதலைக்கு உத்தரவு

சிந்து சட்ட சபைக் காங்கிரஸ் கட்சி தலைவர் ஸ்ரீ ஆர். கே. சித்வா 1942 ஆகஸ்ட் மாதம் முதல் கராச்சி சிறையில் இருந்து வருகிறார். அவருக்கு ஹிருதய நோய் ஏற்பட்டிருப்பதால் டிஸம்பரில் அவர் ஒரு மாதம் பரோலில் விடப்பட்டார். பிறகு அந்த பரோல் காலம் இரண்டு மாதங்களாக நீடிக்கப்பட்டது. இப்போது அவரை விடுதலை செய்ய ஸிந்து சர்க்கார் உத்தரவு பிறப்பித்து விட்டார்கள்.

* * * *

## ஸ்ரீமதி மணிபென் படேல் விடுதலை

ஸர்தார் வல்லபாய் படேல் புதல்வி ஸ்ரீமதி மணிபென் படேலும் ஸ்ரீமதி பிரேம கண்டகரும் நிபந்தனையின்றி விடுதலை செய்யப்பட்டார்கள்.

## வங்கக் கவர்னருக்கு இன்புளூயன்ஸா

வங்கக் கவர்னர் மிஸ்டர் கேஸி இன்புளூயன்ஸா ஜுரத்தால் படுத்த படுக்கையாகவிருக்க நேரிட்டது. அதனால் அவரது வேலைகளை கவனிக்க முடியாது போயிற்று. சமீபத்தில் தான் கேஸி பதவி ஏற்றுக்கொண்டார் என்பது நேயர்களுக்குத் தெரிந்த விஷயம்.

* * * * *

## கோயில் யானைக்கு ரேஷன்!

உணவுப்பொருள் தானியங்களைப் பங்கீடு செய்யும் விஷயத்தில் வாயில்லா பிராணிகளை மறந்துவிடக் கூடாதென்றும், நாட்டின் யுத்த ஏற்பாடுகளில் மிருகங்களும் கலந்துகொள்ள வேண்டியிருப்பதாகவும் ஆகவே போதுமானபடி உணவுப்பொருள் தனக்குக் கிடைக்க ஏற்பாடுசெய்ய வேண்டுமென்றும் கோரி சுவாமி நாராயண் ஆலய யானை நேரில் நேற்று கலெக்டரிடம் ஒரு மனு சமர்ப்பித்தது. கலெக்டர் இது நியாயமான கோரிக்கை எனக்கருதி அந்த யானைக்குப் போதுமான கோதுமையும், மாவும் கிடைக்க ஏற்பாடு செய்யும்படி ரேஷன் அதிகாரிகளுக்கு அறிவித்தார்.

* * * *

## மதுவிலக்கு: அமுலுக்கு வரும்:— ராஜாஜி அபிப்ராயம்

மைசூர் ஹைதராபாத் மதுவிலக்குச் சங்கத்தினர் தமக்கு அளித்த உபசாரப் பத்திரத்துக்குப் பதிலளிக்கையில் ஸ்ரீமான் ராஜகோபாலாச்சாரியார், "ஒரு ஜனநாயக மந்திரி சபைசெய்து வைத்த நல்ல வேலையை ஒழிக்கச் சென்னை சர்க்கார் முடிவு செய்ததை நான் எவ்வளவு பலமாகக் கண்டித்தாலும் போதாது. ஆனால் ஒரு விஷயம் நான் உங்களுக்கு உறுதி கூற முடியும். அதாவது எதிர்காலத்தில் சென்னையில் எந்த மந்திரி சபை அதிகாரத்துக்கு வந்தாலும் சரி மதுவிலக்கு பூரணமாக அமுலுக்கு வரும்" என்று உரைத்தார்.

# போர் போகும் போக்கு

## ஹிட்லரின் பயமுறுத்தல்

ஹிட்லர் நேசக்கட்சியில் பிளவுண்டாக்க மீண்டும் முயன்றிருக்கிறார். தாம் அதிகாரத்திற்கு வந்த தினத்தின் 11-வது ஆண்டு விழாவின்போது அவர் ஒரு பிரசங்கம் செய்தார். "இந்த யுத்தத்தில் ரஷ்யா அல்லது ஜெர்மனிக்குத்தான் வெற்றி; ஜெர்மனி வென்றால் ஐரோப்பா பிழைக்கும்; ரஷ்யா ஜெயித்தாலோ ஐரோப்பிய நாடுகளின் கதி அதோ கதிதான்" என்று அவர் பயங்கரமாக எச்சரித்தார். ஜெர்மனி தன்னலத்திற்காக அன்றி ஐரோப்பாவைப் பாதுகாக்கவே போராடுகிறதாம். இதில் அந்நாடு தோற்றால், பிறகு போல்ஷ்விக் வெள்ளத்திற்கு யாரும் அணைபோட்டுத் தேக்க முடியாதென்றும் அவர் குறிப்பிட்டார். பிரிட்டன் போன்ற நாடுகள் ரஷ்ய உறவைக் கைவிடும்படி தூண்டுவதே இந்த ஸாஹஸப் பேச்சின் நோக்கம். யாருடன் நட்பு அல்லது விரோதம் காட்டுவதென்ற விஷயத்தில் ஹிட்லருக்கு ஒரு திட்டமான கொள்கையெதுவும் கிடையாது; எந்த சந்தர்ப்பத்தில் எது அனுகூலமான முறையோ அதைக் கைப்பற்றுவதுதான் அவர் கொள்கை. ரஷ்யாவையும் பொதுவுடமையையும் பற்றி அவர் வாயிலிருந்து வராத வசைமொழி பாக்கியில்லை. எனினும் அவர் போலந்துமீது பாயுமுன் ரஷ்யாவுடன் ஒரு அனாக்கிரமிப்பு ஒப்பந்தம் செய்து கொண்டார். பிறகு திடீரென்று அவ்வொப்பந்தத்தைக் காற்றில் பறக்கவிட்டு தமது படை பலத்தை ரஷ்யா மீது திருப்ப அவர் தயங்கவில்லை. இப்போது பிரிட்டன் போன்ற நாடுகளைப் பயமுறுத்தி அவற்றைத் தமது கட்சிக்கு இழுக்கப் பார்க்கிறார். ரஷ்யா மீது ஜெர்மனி பாய்ந்த சமயத்தில் ஹிட்லர் ஹெஸ்ஸை பிரிட்டனுக்குத் தூது விட்டதும் இந்நோக்கத்துடன்தான்.

## ஜெர்மனிக்கு நெருக்கடி

இத்துறையில் பல முறை தமக்கு ஏமாற்றமேற்பட்டும் அவர் மீண்டும் இப்போது வலை விரிக்கக் கிளம்பியிருப்பதேன்? ஜெர்மனியின் நிலைமை இப்போது மிக்க நெருக்கடியான தாகிவிட்டது. ரஷ்யர் போலந்துக்குள் புகுந்துவிட்டதுமட்டுமின்றி, பால்டிக் நாடுகளின் எல்லையையும் நெருங்கிவிட்டார்கள். எஸ்டோனியாவின் எல்லைக்கும், ரஷ்ய முன்னணிப் படைகளுக்கும் இப்போது ஒரு மைல்தான். தெற்கே ருமேனிய எல்லையையும் சோவியத் படைகள் நெருங்கிக் கொண்டிருக்கின்றன. இத்தாலியிலும் நாஸிகளுக்கு நெருக்கடி அதிகரித்துவருவது கண்கூடு. ரோமுக்குத் தென்மேற்கே 30 மைல் தூரத்திலுள்ள கடற்கரையில் இறங்கிய நேசப்படை வடக்கேயும், கிழக்கேயும் முன்னேறிக்கொண்டிருக்கிறது. கிழக்கில் இன்னும் சிறிது முன்னேறுமாயின், ஏற்கனவே தென்பகுதியில் போராடிவரும் ஜெர்மனியரது ஸப்ளை மார்க்கங்கள் துண்டிக்கப்பட்டு விடும். இதற்கிடையில் ஜெர்மன் நகரங்கள்மீது நேசப்படை விமானத்தாக்குதலும் கடுமையாகி வருகிறது.

இங்ஙனம் பல திக்குகளில் ஆபத்து மிகுந்துவருவதைக் கண்டே ஹிட்லர் மீண்டும் நேசக்கட்சியைக் கலைக்க முன்வந்திருக்கிறார். அவரது முயற்சி பலிக்குமா வென்பதை ஆராய்கையில், சிலமுக்கிய விஷயங்களைக் கவனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். நேச நாடுகள் சிலவற்றில், முக்கியமாக அமெரிக்காவில் ரஷ்யாவின் முகத்தில் கரி பூசுவதையே தொழிலாகக் கொண்ட சில கோஷ்டிகள் உண்டு. ரஷ்யா-போலிஷ் எல்லைத் தகராறில் அமெரிக்க சர்க்கார் வெளியிட்ட யோசனையை மாஸ்கோ அதிகாரிகள் நிராகரித்து விட்டனர். இதைக்கொண்டு அக்கோஷ்டிகள் ரஷ்யா மீது இன்னும் தீவிரமாக துவேஷப் பிரசாரம் நடத்தக்கூடும். ரஷ்யாவிலும் பிரிட்டன் போன்ற நாடுகள் மீது சந்தேகம் தோன்றியிருப்பதை யாரும் மறுப்பதற்கில்லை. பிரிட்டிஷ்-ஜெர்மன் அதிகாரிகள் ரகசியமாக சமரசம் பேசுவதாக சமீபத்தில் ரஷ்ய சர்க்காரின் பத்திரிகையில் ஒரு செய்தி வெளியானதே இதற்கு அத்தாட்சி. இதையெல்லாம் கண்டே, ஹிட்லர் மீண்டும் தமது விஷம முயற்சியைத் துவக்கியிருக்க வேண்டும். எனினும், நேச நாடுகள் அவரது வலையில் விழுந்துவிடாவென்று எதிர்பார்க்கிறோம்.

* * * *

## ஹோர்-பிராங்கோ சந்திப்பு

ராய்ட்டரின் ராஜீய நிருபர் எழுதுவதாவது:—மாட்ரிட்டிலுள்ள பிரிட்டிஷ் தூதரான ஸர் ஸாமுயல்ஹோர் ஜெனரல் பிராங்கோவை சென்ற வாரத் திறுதியில் பேட்டி கண்டு பேசினார். பிரிட்டனுக்கும், ஸ்பெயினுக்கும் இடையில் இன்னும் தீராமல் பாக்கியிருக்கும் பிரச்னைகளைப்பற்றி இந்தச் சந்திப்பில் பூரணமாக விவாதிக்கப்பட்டது. ரஷ்யாவிலுள்ள ஸ்பானிஷ் நிலப்படை வாலீஸ் பிரச்னை, ஸ்பானிஷ் துறைமுகங்களில் நிறுத்திவைக்கப்பட்டிருக்கும் இத்தாலியக் கப்பல்கள் விடுதலை விஷயம், ஸ்பானிஷ் மொராக்கோவிலும் டான்ஜியரிலும் ஜெர்மன் ஏஜெண்டுகள் செய்துவரும் வேலை ஆகிய விஷயங்களைப்பற்றியும் விவாதிக்கப்பட்டதாகத் தெரிகிறது.

* * * *

### முஸோலினி முறையீடு

முஸோலினி தமது தலைமைக் காரியாலயத்தில் கூடிய படைத் தலைவர்கள் முன்னிலையில் பேசியதாவது:—

செப்டம்பர் 3-ந்தேதி கையொப்பமிடப்பட்டு, 8-ந் தேதி பிரகடனப்படுத்தப்பட்ட இத்தாலிய சரணாகதியைப் பற்றி சிந்தித்துப் பார்ப்பவர் இத்தாலிய மக்கள் ஏமாற்றப் பட்டனர் என்பதை தெளிவாக அறிவர். தாய் நாட்டிற்கு அது பெரிய துரோக காரியம். இந்தச் செயலினால் இத்தாலியப் படைகள் யாவும் வலிமையை இழந்தன. செப்டம்பர் மாதமுடிவில் நாம் இத்தாலியப் படைகளை மறுபடியும் ஒன்று திரட்ட முயன்றோம். ஐரோப்பியப் போர் முனையில் பெரும்பளுவை மேற்கொண்டுள்ள நமது ஜெர்மன் சகாவுடன் சேர்ந்து நின்று நாமும் போர் புரியவேண்டும். ஆனால் இதற்கிடையே இருக்கக்கூடிய சொற்பகாலத்தில் நாம் இரு நாட்டு நட்பும் மேலும் சோபிக்கச் செய்யவேண்டும்."

* * * *

### பிரெஞ்சு மக்கள் வெளியேற்றம்

மத்தியதரைக் கடலோரமாயுள்ள பிரெஞ்சுப் பிரதேசத்திலிருந்து வடபுறமாய் மக்கள் ஏராளமாய்க் கிளம்பியிருப்பதாக ஒரு செய்தி கூறுகிறது.

பிரெஞ்சு மக்கள் நேசதேசப் படையெடுப்பைப் பிரதி தினமும் எதிர்பார்க்கின்றனர். அட்லாண்டிக் கடற்கரையோரப் பிரதேசத்திலும் இதே மாதிரி கவலை தரும் நிலைமை நிலவுவதாக அறிவிக்கப்படுகிறது.

* * * *

### ஸ்பெயினுக்கு எண்ணெய் மறுப்பு

ராய்ட்டரின் ராஜீய நிருபர் அறிவிப்பதாவது:—

ஸ்பெயினுக்கு எண்ணெய் அனுப்ப அமெரிக்கா மறுத்திருப்பதற்கு பிரிட்டிஷ் முயற்சிதான் காரணமாகும். இதிலிருந்து ஸ்பெயின் விஷயத்தில் பிரிட்டனும், அமெரிக்காவும் எப்படி ஒருமித்த விதத்தில் நடந்துகொள்கின்றன என்பதை ஊஹிக்கலாம்.

* * * *

### ஜப்பானில் பல பிரதேசங்கள் காலி

டோக்கியோவில் 15 பிரதேசங்களையும் ஜோகோயா என்ற கைத்தொழில் நகரில் 8 பிரதேசங்களையும் காலி செய்ய உத்தரவாகியிருக்கிறது என்றும், இந்தப் பிரதேசங்கள் ரயில்வே ஸ்டேஷன்களுக்கருகில் இருக்கின்றனவென்றும், யோகஹாமா, ஒஸாகா, கோப், கியூஷியூ தீவின் வடபாகம் இவற்றிலுள்ள கைத்தொழில் பிரதேசங்களும் காலி செய்யப் படுமாறு உத்தரவாகுமென்றும் ஜெர்மன் நியூஸ் ஏஜென்ஸி தெரிவிக்கிறது.

## சேலத்தில் உயர் திருமணம்



**விச்வநாதன் — சுவர்ணம்பாள்**

சேலத்தில் பாங்கரும் ஜமீந்தாருமான ராவ்பகதூர் S. P. ராஜமாணிக்க பண்டாரத்தின் புதல்வன் மிஸ்டர் R. விச்வநாதனுக்கும், குகை A. அருணாசல பண்டாரத்தின் புதல்வி மிஸ் சுவர்ணம்பாளுக்கும் மிக விமரிசையாக திருமணம் 31-1-44 திங்கட்கிழமை நடைபெற்றது. டி திருமணத்திற்கு சேலத்திலும் மற்றுமுள்ள இடங்களிலுள்ள பிரமுகர்கள் விஜயம் செய்திருந்தனர். பிரபல உத்தியோகஸ்தர்களும், ஏனையோரும் விஜயம் செய்ததில் மிஸ்டர் & மிஸஸ் பெட், Mr. P. ராமலிங்கம், திவான்பஹதூர் K. சுந்தரம் செட்டியார் முதலியவர் சேர்ந்தவராவர். மணமகள் மணமகனுக்கு ஏராளமான பரிசுகளும், வாழ்த்துச் செய்திகளும் கிடைத்தன. ஸர் மிர்ஸா இஸ்மெய்ல், ஸர் T. விஜயராகவாச்சாரியார், ஸர், A. ராமசாமி முதலியார், ஸர். P. T. ராஜன், ஸர். R. K. ஷண்முகம் செட்டியார், Mr. C. ராஜகோபாலாச்சாரியார் முதலியவர்கள் வாழ்த்துச்செய்திகள் அனுப்பியவராவர். சிகதூர் சுப்பிரமணிய பிள்ளை அவர்களின் சங்கீதக் கச்சேரி தக்க பக்க வாத்தியங்களுடன் நடைபெற்றது.

# ஸ்ரீ ஸத்யமூர்த்தியின் கடிதங்கள்



## பந்தய விளையாட்டுக்கள்



1941-ம் வருஷம் ஜூன் மாதம் 10-ந் தேதியன்று ஸ்ரீமான் எஸ். ஸத்தியமூர்த்தி பந்தய விளையாட்டுக்களைப் பற்றி ஆங்கிலத்தில் எழுதிய கடிதத்தின் மொழி பெயர்ப்பு இவ்விதழில் தோன்றுகிறது. பந்தய விளையாட்டுக்களில் கலந்துகொள்வதால் தேகசுகம் வளம்பெறுவதுடன் அதனால் கிட்டக்கூடிய இதர பயன்களையும் அவர் தமது பெண்ணுக்கு இக் கடிதத்தில் தெளிவு படுத்தியிருக்கிறார்.

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

இங்கிலாந்திலுள்ள குழந்தைகள், வாலிபர்கள், பெண்கள் ஆகிய எல்லோரும் பலவிதமான பந்தய விளையாட்டுக்களில் ஈடுபடுகின்றனர். பலவிதக் காரணங்களால் நம் நாட்டில் அம்மாதிரியான நிலைமை இல்லை. இப்போது இந்நிலை சிறிது அபிவிருத்தியடைந்து வருகிறது. நம் இளைஞர்கள் பந்தய விளையாட்டுக்களில் பெருவாரியாக ஈடுபடுவதற்கு இடமிருக்கிறது.

நமது கிராமங்களில் வாலிபர்கள் சில்லரையான விளையாட்டுக்களாயிருந்தாலும் அதிமும்முரமாக முனைந்து விளையாடுவார்கள். இவை சில வருஷங்களுக்குமுன்கூட நடந்துகொண்டுதான் வந்தன. ஆற்று மணலிலோ அல்லது மைதானங்களிலோ அவர்கள் விளையாடுவதுண்டு. விளையாட்டு சற்று முரட்டுத்தனமாகக் கூட இருக்கும். அவற்றால் செலவில்லை. ஆனால், அவற்றில் கலந்துகொண்டவர்களுக்கு நல்ல தேகாப்பியாசம் செய்ய வசதியிருந்தது. பாடசாலைகளில் கூட பையன்கள் கடுமையான விளையாட்டுகளில் ஈடுபடுவதுண்டு. பெண்களுக்குக் கோலாட்டம் போன்ற தேகாப்பியாசம் கொடுக்கும் விளையாட்டுகள் இருந்தன. வருஷம் ஒருமுறை நவராத்ரியின்போதோ அல்லது அதற்குப் பிறகோ பெண்கள் கோஷ்டி சேர்த்துக்கொண்டு பல காரியங்களில் ஈடுபடுவார்கள். இவை அவர்களுக்கு நல்ல தேகப் பயிற்சி அளித்து வந்தன. இதுபோன்ற விளையாட்டுகள் மீண்டும் புத்துயிர் பெறும்படி செய்யப்படும் என்று நம்புகிறேன். நமது சிறுவர் சிறுமியர்களுக்கு விளையாட நிறையச் சந்தர்ப்பம் கிடைக்கும் என்பதும் என் நம்பிக்கை.

உன்னுடைய பள்ளிக்கூடத்தில் சில "டிரில்"கள், தேகாப்பியாச வேலைகள் நடக்கின்றன. இவை போதாது; நல்ல பயன் தரத்தக்கதாயும் இல்லை அவை. தேக வலு வளர்ச்சி பெறுவதற்காக நமது வாலிபர்கள், ஸ்திரீகள் இவர்களுக்குப் பயிற்சியளிக்க ஒய். எம். ஸி. ஏ., தேகப் பயிற்சிக் கல்லூரியைச் சேர்ந்த மிஸஸ் பக் மிகவும் உன்னதமான சேவைசெய்கிறார். அவர் நடத்தும் வகுப்புகள் சிலவற்றிற்கு நீ போகவேண்டுமென்பது என் எண்ணம். வெளியே போய் விளையாடக்கூடிய பந்தய விளையாட்டுக்கள் சிலவற்றை நீ கற்றுக்கொள்ள வேண்டுமென்பதும் என் விருப்பம்.

பந்தய விளையாட்டுக்கள் முக்கியமானதென்று நான் எண்ணுகிறேன். கிரிக்கெட், ஹாக்கி, புட்பால் முதலிய விளையாட்டுக்கள் பெண்களுக்குத் தகுதியற்றவை. ஆனால், டென்னிஸ், பாட்மின்டன், வாலி பால் முதலியவை போன்ற

விளையாட்டுகளில் நீ ஈடுபடலாம். நம் நாட்டுப் பெண்கள் இவ்விளையாட்டுகளில் கலந்து கொள்ளவேண்டுமென்று நான் கருதுகிறேன்.

தேகாப்பியாச விளையாட்டுகள் மூலம் நல்ல காற்று கிடைக்கிறது; சந்தோஷமும் ஏற்படுகிறது. இதற்காக மட்டுமில்லாமல் பந்தய விளையாட்டில் கலந்துகொள்வதால் கிட்டக்கூடிய சில தன்மைகள் அபிவிருத்தியடைய வேண்டும். ஸ்திரீயாயினும், ஆடவராயினும் இவ்விஷயத்தைப் பெருக்கிக்கொள்ள வேண்டுமென்பது என் அவா. நமது நாட்டில் கோஷ்டியாக உணர்ச்சி கொண்டு காரியங்கள் செய்ய வேண்டும் என்ற மனோபாவம் இல்லை. தனித்தனியாகப் பொறுக்கிப் பார்த்தால் நாமெல்லாம் புத்திசாலிகளாகத்தான் இருக்கிறோம். ஆனால், ஒன்று சேர்ந்து காரியங்கள் செய்ய முடியவில்லை. இதைச் செய்வதற்கு நமது கக்ஷியை நன்கு நிலை பெறும்படிச் செய்யக் கற்றுக்கொள்ளவேண்டும். தனிப்பட்ட முறையில் வெற்றி வேண்டுமென்ற ஆசையை அடக்கிக்கொண்டு தன்னைச் சேர்ந்த கோஷ்டிக்கே வெற்றி சித்திக்கவேண்டும் என்ற விருப்பம் மேலோங்கி வளரச்செய்ய வேண்டும். தனி முறையில் வெற்றி பெறவேண்டும் என்ற ஆசைக்கும், கோஷ்டிக்கே வெற்றி கிட்ட வேண்டுமென்ற உணர்ச்சிக்கும் வித்தியாசம் உண்டு. அதற்குத் தனியாகச் சில தன்மைகள் வேண்டும். அவற்றை வியாக்யானம் செய்து எழுதுவது சுலபமன்று. கட்சியாகச்சேர்ந்து ஒன்றுபட்டு விளையாடும்போது அந்த விஷயம் என்னவென்பது உனக்குப் புலப்படும். இங்கிலீஷ்காரர்கள் கோஷ்டி கோஷ்யாக நின்று கிரிக்கெட் பந்தயம் ஆடுகிறார்கள். அதை நீ பார்த்தால் கோஷ்டிக்காக மொத்தமாகச் சேர்ந்து எல்லோரும் உணர்ச்சிகொண்டு விளையாடுவதைக் கவனிக்கலாம். இந்தியக் கிரிக்கெட்டு விளையாட்டு இன்னும் அந்த நிலைமைக்கு வரவில்லை. திறமையுடன் பந்தை நன்கு அடிப்பவர்களோ (Batsmen) பந்து வீசுபவர்களோ (Bowlers) நம் நாட்டில் இல்லாதது அதற்குக் காரணமல்ல. இன்னும் நாம் போதியபடி கோஷ்டியோடு சேர்ந்து ஒன்றுபட்டுச் செய்யவேண்டுமென்ற உணர்ச்சியைப் பெருக்கிக்கொள்ளவில்லை. அதுதான் காரணம்.

இரண்டாவதாக ஒரு விஷயம். கட்டுபாட்டுப் முறையுடன் நடக்கும் பந்தய விளையாட்டுகளால் ஒரு அனுகூலம். அதில் கலந்து கொள்பவருக்கு கோஷ்டியின் தலைவருக்கு முற்றிலும் கீழ்ப்படிந்து நடக்கவேண்டுமென்ற தன்மை வளர்ச்சி பெறுகிறது. கண்மூடித்தனமாக யாருக்கும் கீழ்ப் படிந்து நடக்கவேண்டுமென்பதை நான் ஆதரிக்காதவன். இது உனக்குத் தெரிந்த விஷயம். வெற்றிகரமாக, கட்டுப்பாடாக வேலைகளைச் செய்வதற்கான ஒழுங்குமுறை நம் நாட்டில் போதியபடி வளரவில்லை. நல்ல முறையில் பந்தய விளையாட்டுகளுக்கு ஏற்பாடு செய்து நடத்தினால் நம்மிடையே ஒழுங்குமுறை பெருக உதவியாக விருக்கும். "காரணத்தைக் கேட்கக்கூடாது. செய் என்றால் செய். அதுதான் உன் வேலை" என்று சொல்லும் கோட்பாட்டை நான் சொல்லவில்லை. ஆனால், உனக்குத் தலைவராக ஒருவரைப் பொறுக்கிவிட்டுப் பந்தய விளையாட்டில் ஈடுபட்டிருக்கும்போது நீ அவருக்கு எதிர் பேசாமல் கீழ்ப்படிந்தே நடக்கவேண்டும். பந்தயம் முடிந்த பின்னர் நீயும் உன் நண்பர்களும் தலைவரிடம் அதிருப்தி கொள்வதாயிருந்தால் அவரை மாற்றிவிட்டு வேறு தலைவரைப் பொறுக்கிக்கொள்ளுங்கள். ஆனால், அவர் தலைவராயிருக்கும் வரை நீங்கள் அவருக்குப் பணிந்துதான் நடக்கவேண்டும். பந்தய விளையாட்டுக்களில் நீ கலந்துகொண்டால் இது உனக்குத் தெரிந்துவிடும்.

கடைசியாக ஒன்று. எல்லா விளையாட்டுகளிலும் சந்தர்ப்பம் என்று ஒன்றுண்டு. நல்ல கட்சி ஜெயிக்கவேண்டுமென்பதுதான் எல்லா நியாய சித்தமுள்ளவர்களின் விருப்பமாயிருக்கும். ஆனால் சிறந்த கட்சியே எப்போதும் ஜெயித்துக்கொண்டிருப்பதில்லை. எந்தக் கட்சி சிறந்தது என்று எப்போதுமே திட்டமாகச் சொல்லிவிடுவதும் சுலபமல்ல. நீ பந்தய விளையாட்டுக்களில் கலந்துகொள்ளும்போது நீயும் உன் கட்சியும் ஜெயித்தாலும் ஜெயிக்கலாம்; அல்லது தோற்கவும் கூடும். அகம்பாவமின்றி வெற்றி பெறக் கற்றுக்கொள்ள வேண்டும். தோற்றாலும் மாத்சர்யம் கூடாது. இது மிகவும் மகத்தான தன்மை. மேற்படி பந்தய விளையாட்டுக்களில் எல்லாம் தோல்வி பெற்ற கட்சியின் தலைவரோ அல்லது விளையாட்டில் தோற்ற நபரோ வெற்றி பெற்ற கட்சித் தலைவரை முதன் முதலில் போய் பாராட்டுவார். இது ரொம்ப சரியான காரியம். நீ ஜெயித்தாலும் எப்போதும் உனக்கே வெற்றி என்று நினைக்காமல் மற்றவர்களுக்கும் வெற்றி கிடைக்கும் என்பதை மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். நீ ஏதாவது பந்தய விளையாட்டுக்களில் பயிற்சி பெற்றுத் திறம்பட விளையாடு. பிறகு எல்லாம் உனக்குச் சவுகர்யமாயிருக்கும்.

ஜவஹர்லால் நேரு

# உலகை யார் படைத்தார்?

★

(கி. வா. ஜகந்நாதன்)

[என்னுடைய ஆசிரியராகிய மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் தமிழ் இலக்கியத்துக்குச் செய்ததொண்டு ஒரு பால் இருக்க, தமிழ் வசனத்தில் எளிய இனிய நடையில் பல அருமையான நிகழ்ச்சிகளை எழுதியிருக்கிறார்கள். கதை எழுதுவதைப்போலவே கதை சொல்வதிலும் அவர்கள் நிகரில்லாத ஒரு ஸ்தானத்தை வகித்தார்கள். அவர்களுடன் சம்பாஷணை செய்பவர்கள் சிறிது நேரம் பேசியிருந்தாலும்கூட ஒரு நிகழ்ச்சியை அவர்களிடமிருந்து தெரிந்து கொள்வார்கள்.

ஐயரவர்கள் ஆராய்ச்சி வேலையில் ஈடுபட்டிருக்கும்பொழுது அவர்களுடன் மாணாக்கர்களும் இருந்து அவர்கள் வழிகாட்டியபடி தமிழ்த் தொண்டைச் செய்து வருவார்கள். இந்த வேலையில் மாணாக்கர்களுக்குச் சலிப்புத் தோன்றாமல் இருப்பதற்காக ஐயரவர்கள் இடையிடையே உலக அநுபவத்தை விளக்கும் வரலாறுகளையும் பழஞ் செய்திகளையும் விநோதக் கதைகளையும் சொல்லி உத்ஸாகம் ஊட்டுவார்கள்' அந்தக் கதைகளை ஊறுகாய்' என்று குறிப்பிடுவார்கள். அவர்களுடன் பழகியவர்களுக்கு அவர்கள் கூறிய 'ஊறுகாய்க் கதைக'ளின் ருசி நன்றாகத் தெரியும். அந்த இனிய வரலாறுகளில் ஒன்று தான் பின்னே உள்ள கதை.]

குழந்தைகளுக்கு மயில் இறகு என்றால் அளவில்லாத ஆசை. அதைத் தங்கள் புஸ்தகங்களில் வைத்துப் பாதுகாப்பார்கள். சில சமயங்களில் சோற்றுப் பருக்கையையும் உடன் வைத்து 'அதை உண்டு அந்த மயில் குட்டி போடும்' என்று கனவு காண்பார்கள். மயில் இறகைத் துண்டு போட்டுத் தனியே வைத்து, "குட்டி போட்டுவிட்டது!" என்று மற்றப் பிள்ளைகளிடம் காட்டிக் குதூகலிப்பார்கள் இந்தக் கற்பனைப் பிரபஞ்சத்திலே கவிஞர்களுக்குக்கூட இல்லாத அத்தனை ஆனந்தத்தைத் தமக்குக் காணியாக்கிக் கொள்வார்கள் சின்னஞ் சிறு பிள்ளைகள்.

மயில்இறகுகிடைக்கப்பெறாத பிள்ளைகள் அதை வைத்துக் கொண்டிருப்பவர்களைப் பார்த்துப் பொறாமைப்படுவதும், நமக்குக் கிடைக்கவில்லையே என்று ஏங்கி நிற்பதும், சில சமயங்களில் பிறர் புஸ்தகத்திலிருந்து ஒரு சிறு துண்டைத் திருடிக் கொள்வதும் பள்ளிக்கூடத்தில் நிகழும் நிகழ்ச்சிகளே. இப்படி மயில் இறகில் பரமப்ரேமையை யுடைய இளங்குழந்தை ஒருவன், இரண்டாம் வகுப்பில் படிப்பவன், மகாசாது, தன்னுடைய ஆவலை அடக்க முடியாமல் தனக்குப் பக்கத்திலுள்ள பையன் புஸ்தகத்திலிருந்து ஒரு மயில்இறகைத்திருடிக்கொண்டு விட்டான். முன்னே இந்தப் பழக்கத்தை அறியாத அந்த வெள்ளையுள்ளத்தில் 'ஐயோ, திருடிவிட்டோமே! என்ன ஆகுமோ!' என்று உண்டான பயம் அதைப் பெற்றதனால் உண்டாகும் சந்தோஷத்தை வெளி வராமலே செய்துவிட்டது. குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுத்துக்கொண்டேயிருந்தது.

மறுநாள் பள்ளிக்கூடத்திற்கு இன்ஸ்பெக்டர் வந்தார். பழைய காலத்துக் கிராமப் பள்ளிக்கூடம், உபாத்தியாயரின் செங்கோலுக்குப் பயந்து குழந்தைகள் படிக்கும் நாடக சாலையாக விளங்கியது அது. இன்ஸ்பெக்டர் இரண்டாம் வகுப்புக்குள் நுழைந்தார். சரிகைத் தலைப்பாகையும் சிறப்பான உடை வகைகளையும் அணிந்த அந்த மனிதரைப் பார்ப்பதிலேயே குழந்தைகளுக்குப் பிரமிப்பு உண்டாயிற்று. மயில் இறகு திருடிய பையன் அவரைக் கண்டவுடன் முதலில் பிரமித்தானானாலும் அடுத்தபடி அவனுக்குப் பயந்தான் உண்டாயிற்று.—முதல் நாள் தான் செய்த குற்றத்தை விசாரிப்பதற்கு அவர் வந்திருக்கிறாரோ!

இன்ஸ்பெக்டர் பிள்ளைகளைப் பரீக்ஷை செய்யத் தொடங்கினார். முதல் முதலில் அவனைத் தானா கேட்க வேண்டும்? ஏற்கனவே அரண்டு போய் நின்ற குழந்தை அவன்.

"உலகத்தை யார் படைத்தார்?" என்று கம்பீரத்தொனியில் இன்ஸ்பெக்டர் அந்தப் பையனைக் கேட்டார். படைத்தார் என்ற வார்த்தைக்கு அவன் இன்னும் அர்த்தம் தெரிந்து கொள்ளவில்லை. ஏதோ பெரிய காரியம் ஒன்

றைச் செய்தவர் யாரென்று கேட்கிருரென்ற மட்டில் அவன் தெரிந்து கொண்டான், பயந்து கொண்டே அவன் பதில் சொல்லாமல் இருந்தான். வகுப்பு உபாத்தியாயர் சும்மா இருப்பாரா? இன்ஸ்பெக்டர் கேட்ட கேள்வியைத் தம்முடைய வாக்கால் ஒரு முறை உரக்கச் சொல்லிக் கேட்டார்.

"உலகத்தை யார் படைத்தார்" என்ருர்.

இப்பொழுது பதில் சொல்லாமல் இருந்தால் பிரப்பம்பழத்தின் சுவையை உணர வேண்டியிருக்குமே! தட்டுத் தடுமாறிக் கொண்டே பையன், "இன்ஸ்பெக்டர் படைத்தார்" என்ருன்.

அதைக் கேட்ட இன்ஸ்பெக்டர் சிரித்தார். உபாத்தியாயருக்கோ கோபந்தான் வந்தது. "என்னடா சொல்கிருய்? உலகத்தை யார் படைத்தார் சொல்" என்று மீண்டும் அதட்டிக் கேட்டார்.

"நீங்கதான் ஸார்" என்று அடுத்தபடியாகப் பதில் வந்தது. ஒன்றும் புரியாத நிலையில் அவன் அரண்டுபோய் நின்ருன்.

உபாத்தியாயரா விடுகிறவர்? "அட முட்டாள்! உலகத்தை யார் படைத்தார்? சொல்லுகிருயா? அடிவேண்டுமா?" என்று தம்முடைய சுயஸ்வரூபத்தோடும் தொனியோடும் கேட்டார். இப்போது பையனுக்கு உண்மை விளங்கிவிட்டது. 'இவர் பாடத்தில் கேள்வி கேட்கவில்லை. குற்ற விசாரணை தான் செய்கிருர். நாம் சொல்லாவிட்டால் அடிவிழுமென்று ஞாபகப்படுத்துகிருர். நம்முடைய குற்றத்தை ஒப்புக்கொள்ள வேண்டியதுதான்' என்ற சிந்தனை அந்தக் குழந்தை உள்ளத்திலே உண்டாயிற்று.

அடுத்த கணத்தில் குழந்தையின் கண்களில் நீர் சுரந்தது; வாயிதழ்கள் துடித்தன; நாக்குக் குழறியது; "நான் தான் படைத்தேன்!" என்று மிகவும் ஹீனஸ்வரத்தில் அவன் விடை அளித்தான்.

# ஜயஸ்தம்பம்



## (விக்கிரமாதித்தனும், விவேகாநந்தரும்)

விக்கிரம சகாப்தத்தின் இரண்டாயிர ஆண்டு என்பதன் அறிகுறியாக அந்தச் சக்கரவர்த்திக்கு ஞாபகச் சின்னம் அமைக்க வேண்டுமென்று ஒரு முயற்சி நடைபெற்று வருவதைப் பலரும் அறிவர். எந்த வீர மன்னனுடைய ஜயமானது இந்து தர்மத்திற்கே ஜயமாக விளைந்ததோ, அந்த இந்து மன்னனுக்கு ஜய ஸ்தம்பம் நாட்டுவது பொருத்தமானதுதான்! விக்கிரமாதித்தன் என்றும், விக்கிரமார்க்கன் என்றும் பிரசித்தி பெற்ற அந்த மன்னனுடைய தலைநகரமான உஜ்ஜயினி மாநகரத்திலே அந்த ஜய ஸ்தம்பத்தை நாட்டப் போகிறார்கள்-என்பது நமது அரசியல்-கவலைகளுக்கு இடையிலும் மகிழ்ச்சி ஊட்டுவதற்கு உரிய விஷயமாகும்.

### 'நவமணிகள்'

அந்த ஜயஸ்தம்பம் அந்த வெற்றி வீரனுடைய ஞாபகத்திற்கு ஏற்றவிதமாய், கம்பீரமாக நிமிர்ந்து ஐந்து படிகளோடு கூடிய ஒரு பீடத்திலே நிற்கப் போகிறதென்று தெரிகிறது. அந்த ஸ்தம்பத்திலே அவனுடைய ராஜ சபையை அலங்கரித்ததாகக் கருதப்படும் 'நவமணிகள்' என்று பிரசித்தி பெற்ற ஒன்பது மேதாவிகளைச் சிற்ப வடிவில் அமைப்பதாகவும் உத்தேசம்.

அந்த மேதாவிகள் பழைய காலத்திலே நமது பாரத பூமியை அலங்கரித்தார்கள் பழைய உலகத்தையே நவமணிகளாய் அணிசெய்தார்கள் என்று கூடத் துணிந்து கூறலாம். அவர்களில் முக்கியமானவன் மகாகவி காளிதாஸன் என்கிறார்கள். தென்கடல் முத்தைப் போல் திக்கெலாம் புகழக் கவியரசு புரிந்தவன் காளிதாஸன். மற்ற மேதாவிகளையும், கலாஸாகரம் தந்த பலவேறு நன்மணிகள் என்று சொல்ல வேண்டும்.

இந்த மணிகளையெல்லாம் அந்த அந்தஇடத்தில் அழகு பெற வைத்துக்காட்டிய மாற்றுயர்ந்த தங்ககை என்று கருதுகிறார்கள், விக்கிரமாதித்தனுடைய விஜயபராக்கிரம சௌந்தரியத்தை. ஆகவே, விக்கிரம ஜயஸ்தம்பம்

பி. ஸ்ரீ

அந்த ஒன்பது மணிகளோடும் வேறு சிற்ப அணிகளோடும் விளங்கப்போகிறது. சரித்திர ஆதாரம் எப்படியிருந்தபோதிலும், ஐந்து படிகளோடு கூடிய பீடத்திலே நிற்கப்போகும் ஜய ஸ்தம்பம், நமது எதிர்காலப் பெருவாழ்விற்கு ஒரு ஜயமங்கள சூசகமாகக் கருதத்தக்கது.

### 'மெய்யா, பொய்யா?'

இனி இந்தக் கனவுகளிலிருந்து கொஞ்சம் விழித்துக்கொண்டு, ஆராய்ச்சிக் கூட்டிலே விக்கிரமாதித்தனையும் இழுத்து வரச் செய்து, விக்கிரமா! நீ மெய்யாகவே வாழ்ந்தவன்தானா? உன்னை வேதாளம் பிடித்து......இல்லை; நீதான் வேதாளத்தைப் பிடித்து என்று கதை கதையாய்ச் சொல்லி வருகிறார்களே? பாவம்: முழி முழியென்று முழிக்கிறாயே! வேதாளம் மறுபடியும் கட்டவிழ்த்துக்கொண்டு முருக்க மரம் ஏறிக்கொண்டதா?'' என்றெல்லாம் குறுக்குக் கேள்விகள் போட்டுப் பார்க்கலாம். ''விக்கிரமா! நீயே இல்லையோ?–வேதாளமே இல்லாததுபோல்'' என்று பயமுறுத்திப் பார்க்கலாம். ''காடாறு மாதமும் நாடாறு மாதமுமாகத் திரிந்து-என்ன? அலைச்சல்-பிசாசுதான் பிடித்துக்கொண்டதா?— இரண்டாயிரம் ஆண்டுகள் நீ ஒருவனே—என்ன கஷ்டம்!— அரசு புரிந்ததாய்க் கேட்டிருக்கிறோமே! அப்படியானால் இந்த இரண்டாயிர ஆண்டுக் கொண்டாட்டம் இன்று எதற்காக? விக்கிரமா! என்ன அக்கிரமம்?'' என்றும் ஒரு போடு போட்டுப் பார்க்கலாம்.

### அகண்ட இந்துஸ்தான வீரன்

அதெல்லாம் இருக்கட்டும்: இந்த அரசன் பெயர் வடநாட்டிலே எவ்வளவு பிரசித்தமோ அவ்வளவு பிரசித்தம் தமிழ் நாட்டிலும் என்பது தெரியுமா? வாசகர்களே! தமிழ் நாட்டு முஸ்லீம் ஒருவரே இந்த அகண்ட இந்துஸ்தான விக்கிரமாதித்தனுடைய கதைகளைத் தமிழில் எழுதி வெளியிட்டிருக்



கிருர், தெரியுமா? ஆனால் அது பாக்கிஸ்தான்-திராவிடஸ்தான் தோன்ருத காலம்.

காளிதேவியின் அருள் பெற்றுத்தான் விக்கிரமாதித்தன் அவ்வளவுகாலம் ஆண்டானென்றும், அத்தனை வெற்றிகள் பெற்று விளங்கினுன் என்றும் சொல்லுகிருர்கள். அந்த உஜ்ஜயினி மகாகாளியின் பெயரையும் தமிழர்கள் மறந்து போகவில்லை. உச்சனிமாகாளி என்று உச்சாரணம் செய்து கொண்டே விக்கிரமாதித்தன் கதை ஒன்றைச் சொல்லத் தொடங்கிவிட்டால் அழுத பிள்ளையும் வாய் மூடுமே: வாய் மூடிச் செவிசாய்த்துக் கதை கேட்குமே நம் தமிழ் நாட்டிலும்! இதுமட்டுமா? 'உச்சினி மாகாளி' திருநெல்வேலி ஜில்லாவில் ஒரு கிராம தேவதையாகவும் காட்சி தருகிருள்!

அந்தக் காளிக்கும் அந்த வீர சக்கரவர்த்திக்கும் இருப்பிடமாகிய உஜ்ஜயினியை 'உச்சயினி' என்று ஒரு சிவநேசச் செல்வர் தமிழ் நூல்களில் ஒன்ருகிய காஞ்சிப் புராணத்திலே பிரஸ்தாபித்திருக்கிருர். நம்முன்னேர் உஜ்ஜயினியை 'உஞ்சயினி'யென்றும் 'உஞ்சை'யென்றும் வழங்கியதும் உண்டு.

"விக்கிரமாதித்தன் எறும்பின் பாஷையை அறிந்தான்!" என்று ஜீவக சிந்தாமணி உரையில் காணப்படுவதால் அந்தக் காலத் தமிழறிஞர்களுக்கும் விக்கிரமாதித்தன் கதைகள் தெரிந்திருந்தன என்று ஊகிக்கலாம்.

### உண்மையான வீரன்

இப்படித் தென்னிந்தியாவிலும் பிரசித்திபெற்று விளங்கும் விக்கிரமாதித்த மன்னன் வேதாளக் கதைகளில் வரும் கற்பனை-மன்னன் தான் என்று நினைப்பது தவறு. இவன் உண்மையாகவே குப்த ராஜ வம்சத்தில் தோன்றிய ஒரு சக்கரவர்த்தி என்று சில சரித்திரக்காரர்கள் அபிப்பிராயப்படுகிருர்கள். இவர்கள் கி. மு. 57-ல் விக்கிரமன் இருந்ததாக ஒப்புக்கொள்ளவில்லை. கி. பி. 375—413 ஆண்டுகளில் ஆட்சி செலுத்திய இரண்டாவது சந்திர குப்தன் தான், விக்கிரமாதித்தன் என்ற பட்டப் பெயரோடு இந்தியா பெரும் புகழ் பெறும்படி வீரம் விளைத்து வெற்றி சூடிய பேரரசன்— என்று சொல்லுகிருர்கள்.

சுமார் முப்பத்தெட்டு ஆண்டுகளாக இந்து நாகரிகத்திற்காகவும் இந்து தர்மத்திற்காகவும் தன் வீரத்தையும் வெற்றியையும் அர்ப்பணம் செய்த இந்தப் பேரரசனுடைய எதார்த்தப் பெயரையும் மற

(21-ம் பக்கம்)

பாரதி புதுவைக்காட்சி

# பாரதியும் கவிதையும்

*

ஸ்ரீமதி தங்கம்மாள் பாரதி

என் தந்தை பாரதியார் புதுவையில் காலத்தின் கோலத்தினால் பட்ட துன்பங்கள் அளவிறந்தன. "பட்டன தொல்லை பல பெரும் பாரதம்."

எப்போதும் பிரமத்திலேயே லயித்து பரமாத்மாவோடு ஒன்று சேர வேண்டுமென்ற அவா தந்தையாருக்கு மிகுதியாகவுண்டு. அதற்கு சமயமும் சந்தர்ப்பமும் சரிவர அமையாமல் ஏதேனும் தடங்கல் ஏற்பட்டுக்கொண்டேயிருக்கும். கவிதையில் ஆழ்ந்து, கலை வளர்ச்சியிலே ஈடுபடுவதற்குத் துடிதுடிப்பார். ஆனால் கொடிய வறுமை அவரை ஒன்றிலும் ஈடுபடமுடியாமல் தடுத்தது. வறுமைமட்டுமல்ல. நாட்டுப் பணி செய்வதனால் ஏற்பட்ட விக்கினங்களும் காரணங்களாகும். அதை நினைத்து நினைத்து உருகுவார். "இலக்கிய வளர்ச்சிக்கு கவிதையென்னும் அமுதத்தை அள்ளிப் பருகும்போது விழுங்கும் சமயத்தில் தொண்டையில் முள் தைத்துவிட்டதே!" என்று ஓர் நாள் தந்தை மிகவும் சோர்வுற்றிருந்தார். "உடம்பு சரியாயில்லையா அப்பா?" என்றேன். "இல்லை அம்மா. மனம்தான் சரியாயில்லை" என்றார். "ஏன்?" என்றேன். "பன்றி வாழ்வு வாழ்கிறேன். நரகத்துழலுகிறேன்" என்று பதில் வந்தது.

பிரமித்துப் போனேன் நான். என்ன கஷ்டம் புதிதாயேற்பட்டு விட்டதோ தெரியவில்லையே? இல்லாவிட்டால் நான் அமரன், நான் தேவன், நான் சிவன் என்று கூறுபவர் இப்படிச் சொல்லவேண்டுமானால்? "என்ன விபத்து ஏற்பட்டு விட்டதப்பா?" என்றேன். என் பதைபதைப்பையும் துடிப்பையும் கண்ட தந்தை "அப்படியொன்றும் வந்துவிடவில்லை. பயப்படாதே! நான் கவிதை வெள்ளத்தில் மிதக்க எண்ணினேன். அது முடியவில்லை. துன்ப வெள்ளத்தில் மிதக்கிறேன். நம் மக்களின் வாழ்க்கை முறையின் கேவலமும் வேறு சகிக்க முடியவில்லை.

நான் "இவ்வளவுதானா? இது எப்போதும் உள்ள விஷயந்தானே என்றேன்." "சரிதானம்மா நினைக்குந்தோறும், ஒவ்வொரு கணமும், எப்போ நினைத்தாலும் நமது நிலை என்னை கலங்கச் செய்கிறது." என்றார்.

"ஆமாம் அதற்கும் நீங்கள் பன்றி வாழ்வு வாழ்கிறேன் என்று கூறியதற்கும் என்ன சம்பந்தம்?" என்றேன். அதா? பெரிய கதையல்லவா? என்றார்.

அந்தக் கதையைச் சொல்லுங்கள் என்று துரிதப்படுத்தினேன். கீழே எழுதிய பாட்டைப் படித்துக் காண்பித்தார்.

"வாராய்! கவிதையாம் மணிப்பெயர்க் காதலி
புன்னாள் பன்மதியாண்டு பலகழிந்தன.
நின்னருள் வதன நானேருறக் கண்டே
அந்தநாள் நீயெனை யடிமையாக் கொள, யாம்
மானிடர் குழாத்தின் மறைவுறத் தனியிருந்
தெண்ணிலா வின்பத் திருங்கடற் றிளைத்தோம்
கலந்துயாம் பொழிலிடைக் களித்தவன் னாட்களில்.
பூம்பொழில் குயில்களினின் குரல் போன்ற
தீங்குரலுடைத்தோர் புள்ளினைத் தேர்ந்திலேன்;
மலரிதை துன்றன் வாள் விழியொப்ப
நிலவிய தொன்றினை நேர்ந்திலேன்; குளிர் புனற்
சுனைகளிலுன் மணிச் சொற்கள் போற்றண்ணிய
நீருடைத் தறிகிலேன்; நின்னொடு தமியனாய்
நீயே யுயிரெனத் தெய்வமு நீ யென
நின்னையே பேணி நெடுநாள் போக்கினேன்.
வானகத் தமுத மடுத்திடும் போழ்து
மற்றதனிடையோர் வஞ்சகத்தொடுமுன்
வீழ்ந்திடைத் தொண்டையில் வேதனை செய்தென
நின்னொடு களித்து நினைவிழந்திருந்த
எனைத் துயர்ப் படுத்தா வந்தெய்திய துலகிற்
கொடியன யாவுனுங் கொடியதா மிடிமை.
அடிநா முள்ளினை அயல் சிறிதேகிக்
களைந்து பின் வந்து காண்பொழுது, ஐயகோ!
மறைந்தது தெய்வ மருந்துடைப் பொற்குடம்,

மிடிமைநோய் தீர்ப்பான் வீணர் தம்முலகப்
புன்தொழில் ஒன்று போற்றுது மென்பான்
தென் திசைக் கண்ணொரு சிற்றூர்க் கிறைவனுன்
திருந்திய வொருவனை துணையெனப் புகுந்தவன்
பணிசெய விரைந்தேன்...பாதகி நீ யென்னைப்
பிரிந்து மற்றகன்றனை பேசொணு நின்னருள்
இன்ப மத்தனையு மிழந்து நானுழன்றேன்.
சின்னுள் கழிந்தபின்—யாதெனச் செப்புகேள்!
நின்னெடு வாழ்ந்த நினைப்புமே தேய்ந்தது."

"இனிமேல்தான் கதையாரம்பிக்கிறது கவனி" என்ருர் தந்தை. "ஆகட்டும்" என்றேன்.

கதையிலோர் முனிவன் கடியதாஞ் சாப
விளைவினுற் பற்றியா வீழ்ந்திடு முன்னர்த்
தன் மகனிடை என்றைய நீயான் புலைப்
பன்றியாம்போது பார்த்து நில்லாதை!
விரைவிலோர் வாள் கொடு வெறுப்புடை யவ்வுடல்
துணித்தெனைக் கொன்று தொலைத்தலுன் கடனும்.
பாவமிங்கில்லை யென் பணிப்பிதாதலின்
தாதை சொற் கிளைஞன் தளர்வொடு மிணங்கினன்.
முனிவனும் பன்றியா முடிந்தபின், மைந்தன்
முன்னவன் கூறிய மொழியினை நினைந்தும்,
இரும்புகழ் முனிவனுக் கிழியதா மிவ்வுடல்
அமைந்தது கண்டு நெஞ்சழன்றிடல் கொண்டும்,
வாள் கொடு பன்றியை மாய்த்திடலுற்றனன்.
ஆயிடை மற்றவ் வருந்தவப் பன்றி
யினையது கூறும்.—"ஏடா! நிற்க!
நிற்க! நிற்க! முன்னர் யா நினைந்தவா
நத்துணை துன்புடைத் தன்றிவ் வாழ்க்கை
காற்றும் புனலும் கடிப்புற் கிழங்கும்
இணைய பல்லின்ப மிதன் கணே யுளவாம்;
ஆறேழ் திங்கள் அகன்றபின் வருதியேற்
பின்னெனைக் கோறலாம்" பீழையோ டிவ்வுரை
செவியுறீகி முடிசாய்த்தினை யவன் சென்றனன்
திங்கள் பலபோயபின், முனி மகன் சென்று
தாதைப் பன்றியோர் தடத்திடைப் பெடையொடும்
போத்தினம் பலவொடு மன்பினிற் பொருந்தி
யாடல் கண்டயிர்த்தனன் ஆற்ருெணு தருகு சென்று
"எந்தாய்! எந்தாய்! யாதரோ மற்றிது!
வேத நூலறிந்த மேதகு முனிவரர்
போற்றிட வாழ்ந்தநின் புகழ்க்கிது சாலுமோ?"
எனப் பலகூறி யிரங்கினன்; பின்னர்
வாள் கொடு பன்றியை மாய்த்திடல் விழைந்தான்,
ஆயிடை முனிவனகம் பதைத் துரைக்கும்;
'செல்லடா! செல்கத் தீக்குணத்திழிஞ!
எனக்கிவ் வாழ்க்கை யின்புடைத் தேயாம்
நினக்கிதிற்றுன்ப நிகழுமேற் சென்றல்
வாளினின் நெஞ்சை வகுத்து நீ மடிக!'
அன்றிது கூறி யிருந்தவப் பன்றி தன்
இனத்தொடுமோடி யின்னுயிர் காத்தது
இன்னது கண்ட இளையவன் கருதும்;
"ஆவா! மானிடர் அருமையின் வீழ்ந்து
புன்னிலை யெய்திய போழ்த்தி னெடுங் காற்
ருெருமரு கின்றிலர், சில பகல் கழிந்தபின்
புதியதா நீசப் பொய்மைகொள் வாழ்விற்
விருப்புடையோராய் வேறு தா மென்றும்
அறிந்திலரே போன்றதிர் களிக்கின்ருர்
என் சொல்கேன் மாயையி னெண்ணரும் வஞ்சம்"
"தன் பணிக் கிசைந்தென் தருக் கெலா மழிந்து
வாழ்ந்தனன் கதையின் முனிபோல் வாழ்க்கை;"

நான்:-அப்பா கதையானுலும் ரொம்ப நன்ருயிருக்கிறது. மானிட வாழ்வின் இயற்கையை—அப்படியே சித்திரித்திருக்கிறது. விதியின் கொடுமைக் காளாஞல்—ஒருவன் இமய மலைச் சிகரத்தில் ஏற்றமுடன் வாழ்ந்தாலும், அதல, பாதாளத்தில், நிமிஷப் போதில் வீழ்வான், என்பதையும், அப்படி வீழ்ச்சி பெற்ற வாழ்விலும், ஒரு இன்பம் காண்பான் என்பதும், இந்தக் கதையிலிருந்து தெரிகிறது. ஆனுல் தாங்கள் கவிதையோடு எப்போதும் உறவாடிக் கொண்டிருந்து விட்டு, அவள் (கவிதை) என்னைவிட்டு அகன்ருள் "என்று கூறுவது பொருத்தமாயில்லையே!" என்றேன். "வாஸ்தவம்தான். சில சமயம் அவள் போய் விட்டது போல் ஓர் பிரமை, அப்பொழுது உண்டாகும் வேதனையினுல் தான் இவ்வண்ணம், கூறும்படியிருக்கிறது என்ருர் தந்தை.

---

# சாமந்தி



ஏ. வெங்கடராமன்

பாமாவுக்கு சுமார் 10 வயதிருக்கும். அவள் பிறந்த ஒரு மாசத்திற்குள்ளாகவே, அவளுடைய தாயார் ஒரு கொடிய ஜுரத்தினுல் இறந்து போய் விட்டாள். அதனுல் அவளுடைய தகப்பனுர் வேருெரு பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டார். அவள் பாமாவை ரொம்பவும் கொடுமையாக நடத்தினுள். ஏதாவது ஒரு சிறு குற்றத்தை அறியாமல் அச்சிறுபெண் செய்துவிட்டாலும், அதைப் பெரிதாக எண்ணி பாமாவை நன்ருக அடித்துவிடுவாள். பாமாவின் தகப்பனுருக்கு தன்னிரண்டாவது மனைவி தன் பெண்ணைக் கொடுமைப்படுத்துகிருள் என்பது நன்ருகத் தெரியும். இருந்த போதிலும் கல்யாணியின் (அது தான் பாமாவினுடைய சித்தியான மாற்ருந்தாயின் பெயர்) கூச்சலுக்கும், நடலச் செய்கைகளுக்கும் பயந்து அவளை அவ் விஷயத்தைப்பற்றி ஒன்றுமே கேட்பது கிடையாது. இறைவனருளால் தான் தன் புது மனைவி திருந்தக்கூடுமென்று எண்ணி பகவானைப் பிரார்த்திப்பார். பாமாவும் தன் மாற்ருந் தாயின் கொடுமைகளைப் பொருட்படுத்தாமல் பொறுமையாகவிருந்து வந்தாள்.

ஒரு நாள் பாமா தோட்டத்தில் விளையாடிக்கொண்டிருந்தாள். அப்பொழுது அங்கு தற்செயலாய் ஓடி வந்த ஒரு எருமை மாட்டைக் கண்டு பயந்து ஓடினுள். தவறி கீழே விழுந்து விட்டாள். அதன் பலன் என்ன? அன்றுதான் புதிதாய் அடுக்கிக்கொண்டிருந்த கண்ணுடி வளையல்களில் சில உடைந்துவிட்டன. அச்சமயத்தில் அவளுடைய சிற்றன்னை அங்கு வந்தாள். கல்யாணியைக் கண்டதும் பாமா பயந்து மெதுவாக வீட்டினுள் நுழையலானுள். கீழே விழுந்து கிடந்த உடைந்த வளையல் துண்டுகளைக் கண்ணுற்ற கல்யாணிக்கு பாமா தான் வளையல்களை உடைத்திருக்கவேண்டும் என்ற எண்ணமேற்பட்டது. உடனே அவளைக் கூப்பிட்டு, சமாசாரத்தைத் தெரிந்து கொண்டு, பலவாறு திட்டி, அங்கு கிடந்த ஒரு புளியங் கொம்பினுல் நன்ருக அடித்து விட்டாள். பாவம் என்ன செய்வாள் பாமா?

அன்றிரவு பாமாவுக்குத் தூக்கமே வரவில்லை. தன் சிற்றன்னையின் கொடுஞ் செயல்களை தன்னுல் இனி பொறுக்கமுடியாது என்றுணர்ந்தாள். அந்த உணர்ச்சியிலேயே சிறிது நேரம் தன்னையுமறியாமல் தூங்கினுள். விடியற்காலை நான்கு மணி சுமாருக்கு விழித்துக்கொண்டாள். எங்கும் பிரகாசமாய் தன் நிலவு ஒளியை வீசிக்கொண்டிருந்தான் சந்திரன். காலையில் அடிபட்ட தழும்புகள் பாமாவுக்கு பழைய ஞாபகத்தை உண்டுபண்ணின. அடிபட்ட வலியினுலும் அழாத அப்பெண் தழும்புகளைப் பார்த்ததும் கண்களில் நீர்த்துளிகள் ததும்ப மனம் புழுகினுள். கடைசியாக ஒருவாறு தன் அழுகையை அடக்கிக்கொண்டு ஒரு விதத் தீர்மானத்துடன் படுக்கையை விட்டெழுந்து உறுதியான தைரியத்தை வரவழைத்துக் கொண்டு வீட்டை விட்டு ஒருவருமறியாமல் வெளியேறினுள்.

மறுநாள் காலையில் பாமாவின் தகப்பனுர் தன்குமாரி வீட்டில் இல்லாததைக் கண்டதும் திக்பிரமையடைந்தார். செய்வது இன்னது என்றறியாமல் திகைத்தார். இறுதியில் அவள் வீட்டை விட்டு வெளியே சென்று விட்டதன் காரணம் அன்று நடந்த பரிதாப சம்பவமே என்பதை உணர்ந்தவராய் அவரும் வீட்டிலிருக்க விருப்பமில்லாதவராய் வெளியே சென்றுவிட்டார்.

தன்னில்லத்தை விட்டுச் சென்ற பாமா தன்கால் போன போக்காகப் போய்கொண்டிருந்தாள். சுமார் 5, 6 மைல் தூரம் போயிருப்பாள். அப்பொழுது அங்கு வழியில் ஒரு வலையில் இரண்டு அழகிய புருக்கள் அகப்பட்டுக்கொண்டு தப்பிச் செல்ல வழி தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தன. அதைக் கண்ணுற்ற பாமாவுக்கு மனம் சகிக்கவில்லை. உடனே அவைகளை வலையினின்றும் விடுவித்து தன்னுடன் எடுத்துச் செல்லலானுள்.

காலை 8-மணியிருக்கும். சிறு பெண்ணுன பாமாவினுல் எவ்வளவுதூரம் தான் நடக்கமுடியும்? கடைசியில் பசி தாளமாட்டாமல் ஒரு குளக்கரையின் மீது சோர்ந்து விழுந்தாள்.

கொஞ்சம் நேரங்கழித்து தெளிந்தெழுந்தாள் பாமா. தண்ணீரைக் குடித்தாவது தன் பசியைத் தணித்துக் கொள்ளலாம் என்ற எண்ணத்துடன் புருக்களைக் கீழே விட்டுவிட்டு குளத்தில் இறங்கினுள். பளிங்கு போலிருந்த தண்ணீரை நாலுகை அள்ளிக்குடித்துவிட்டு படிக்கட்டினின்றும் மேலே ஏறுகையில் 'தொப்'பென்று ஒரு சப்தம் கேட்டது. உடனே சப்தம் வந்த திக்கை நோக்கித் திரும்பிப்பார்த்தாள். ஒரு கிழவி ஸ்நானம்செய்துவிட்டு திரும்புகையில் படிக்கட்டு தவறி கீழே விழுந்து கிடப்பதைக் கண்டாள். சட்டென்று கிழவியிடம் சென்று, கீழே விழுந்ததினுல் அவளுக்கு ஏற்பட்ட ஒன்றிரண்டு சிறு காயங்களைத் துடைத்து

---

## சின்னச்சாம்பு

வ. ரா. வின்

புதிய தொடர்கதை



*'மித்திரன்' வாரப்பதிப்பில் தொடர்ச்சியாகக் கட்டுரை எழுதிவரும் ஸ்ரீ வ. ரா.*

**"சின்னச்சாம்பு"**

*என்ற தலைப்புடன் ஓர் தொடர்கதை எழுதியுள்ளார். அது அடுத்த வார முதற் கொண்டு ஆரம்பமாகிறது.*

---

சிகிச்சை செய்தாள். சிறிது நேரம் சென்றபின் கிழவி மெதுவாக எழுந்தாள். பாமாவைப் பார்த்ததும் சந்தோஷத்துடன் "பெண்ணே! நீ யார்?" என்று பிரியத்துடன் வினவினள் அவள்.

பாமா தன் வரலாறு முழுவதையும் கூறிவிட்டு "பாட்டி! சித்தியின் கொடுமையைத்தாங்க முடியாமல் எங்கேயாவது சென்று விடலாம் என்ற எண்ணத்துடன் ஒருவருக்கும் தெரியாமல் நேற்று ராத்திரி வீட்டை விட்டுக் கிளம்பி வந்துவிட்டேன்" என்று பதிலளித்தாள்.

பாட்டி அவளிடம் இரக்கங் கொண்டு அவளை அன்புடன் தடவிக்கொடுத்து "பாமா! நீ இனி என் பேத்தி மாதிரி. நான் தனியாய் தான் ஒரு குடிசையில் வசித்து வருகிறேன், நீயும் என் கூடவே ஒத்தாசையாக இரு, நான் உன்னைக்காப்பாற்றுகிறேன்" என்று கூறி தன் குடிசைக்கு அழைத்துச் சென்றாள்.

அன்று முதல் பாமா கிழவியுடனேயே தன் புருக்களுடன் சௌக்கியமாய் வசித்து வந்தாள். இதனால் கிழவிக்குப் பரம சந்தோஷம்.

ஒரு நாள் காலை நேரம். பாமா அன்புடன் வளர்த்து வந்த புருக்கள் குடிசையின் பின்புறத்திலுள்ள ஒரு மரத்தின் மீது உல்லாசமாய் உட்கார்ந்து கொண்டிருந்தன. அச்சமயம் அவ்வழியாகப் போய்க்கொண்டிருந்த வேடனொருவன் அவைகளைக் கண்டான். உடனே அவன் தன்னிடமிருந்த வில்லிலிருந்து ஒரு கூரிய அம்பை அப்பறவைகளின் மீது விடுத்தான். ஆ! பரிதாபம்!! அந்த அம்பு அவ்விரண்டு பக்ஷிகளின் உயிரையும் கவர்ந்தது. உயிரிழந்த புருக்கள் மரத்தினின்றும் கீழே விழுந்தன.

அநியாயமாகப் புருக்களைக் கொன்ற வேடன் மட்டும் கடவுளுடைய தண்டனையிலிருந்து தப்ப முடியுமா? வெறிகொண்டு அவ்வழியே ஓடிக் கொண்டிருந்த ஒரு காட்டு யானை வேடனைத் துதிக்கையால் தூக்கி ஒரு சுழட்டு சுழட்டி ஆகாயத்தில் வீசியெறிந்து தன் வழியே சென்றுவிட்டது. அந்த நிமிஷமே, "ஐயோ!" என்ற சப்தத்துடன் வேடன் பூமியில் விழுந்து உயிர் துறந்தான்.

குடிசையினுள்ளிருந்த பாமாவிற்கு வேடனின் அலறல் சப்தம் கேட்டது. உடனே என்ன விசேஷம் என்றறிய ஆவல் கொண்டு குடிசையிலிருந்து தோட்டத்திற்கு வந்து பார்த்தாள். அவளுடைய கண்களில் முதலில் தென்பட்டது உயிரற்ற புருக்களே. அவைகளின் நிலைமையைக் கண்டதும் பாமாவின் மனம் துடியாய்த் துடித்தது. அவைகளை எடுத்து அன்புடன் தன் கரங்களை பாமா அவைகளின்மீது வைத்ததுதான் தாமதம். உடனே மின்னல் போன்ற ஒரு வெளிச்சம்தோன்றியது. புருக்கள் மறைந்தன. அவைகளுக்குப் பதிலாக அந்த வெளிச்சத்திலிருந்து இரண்டு அழகிய ஸ்திரீகள் வந்தார்கள். இந்த ஆச்சர்ய சம்பவத்தைக் கண்டதும் பாமாவுக்கு ஒன்றும் தோன்றவில்லை. வியப்பினால் திக் பிரமை அடைந்தாள்.

அவளுடைய நிலைமையைக் கண்ட அந்த நங்கையர் இருவரும் "பாமா! இறந்த புருக்கள் மறைந்து, அதற்குப் பதில் நாங்கள் இங்கு திடீரெனத் தோன்றியது உனக்கு ஆச்சரியத்தை உண்டாக்குகிறதல்லவா?" என்று கேட்டார்கள்.

பாமா "ஆமாம்" என்று பதில் கூறுவதற்கறிகுறியாகத் தன் தலையை அசைத்தாள்.

அவ்விரண்டு மாதர்களில் ஒருத்தி "பாமா, எங்களுடைய வரலாற்றை இன்னும் கொஞ்ச நேரத்தில் தெரிவிக்கிறோம். அதற்கு முன் நீ எங்களுடன் கூட வா" என்று கூறி வேடன் இறந்து கிடந்த இடத்திற்கு அழைத்துச் சென்றாள்.

அங்கு பிணமாய்க் கிடந்தவனுடைய தோற்றத்திலிருந்தும், அருகிலிருந்த வில்லினாலும் அவன் ஒரு வேடன் என்பதை ஊகித்துணர்ந்தாள் பாமா. அந்த ஸ்திரீகளைப் பார்த்து "இந்த வேடன் யார்? ஏன் இவன் இங்கு பிணமாகக் கிடக்கிறான்?" என்று பின்னும் ஆச்சர்யத்துடன் கேட்டாள்.

(30-ம் பக்கம்)

# ஸ்ரீ ஸதாசிவ ப்ரும்மேந்திரரின் பக்திரஸக் கீர்த்தனைகள்



(காப்பிரைட்)

## திருவாங்கூர் ஆஸ்தானவித்வான் செம்மங்குடி ஸ்ரீ ஸ்ரீனிவாஸய்யர் ஸ்வரப்படுத்தியது

I

பல்லவி

பூர்ண போதோ ஹம்—ஸதானந்த
பூர்ண போதோ ஹம்— (பூர்ண)

அனுபல்லவி

வர்ணாச்ரமாசார கர்மாதி தூரோ ஹம்
ஸ்வர்ணவதகில விகாரக தோஹம் (பூர்ண)

சரணங்கள்

1 ப்ரத்யகாத்மாஹம் ப்ரவித்த ஸத்யகனோஹம்
ச்ருத்யந்தசதகோடி ப்ரகடித ப்ரம்மாஹம்
நித்யோஹ மபயோஹ மத்விதீயோஹம் (பூர்ண)

ஸாக்ஷிமாத்ரோஹம் ப்ரகலிதபக்ஷபாதோஹம்!
மோக்ஷஸ்வரூபோஹ மோம்காரகம்யோஹம்
ஸௌக்ஷ்மோஹமணகோஹ மத்புதாத்மாஹம் (பூர்ண)

ஸ்வப்ரகாசோஹம் விபுரஹம் நிஷ்ப்ரபஞ்சோஹம்
அப்ரமேயோஹ மசலோஹமகலோஹம்
நிஷ்ப்ரதர்க்யா கண்டைக ரஸோஹம் (பூர்ண)

அஜநிர்மமோஹம் புதஜன பஜநீயோஹம்
அஜரோஹமரோஹமனந்த ஸ்வரூபோஹம்
நிஜபூர்ண மஹிம்னி நிஹிதமஹிதோஹம் (பூர்ண)

நிரவயவோஹம் நிருபமநிஷ்கலங்கோஹம்
பரம சிவேந்த்ர ஸ்ரீ குரு போத சமுதித
நிரவதி நிர்வாண சுக ஸாகரோஹம் (பூர்ண)

II

வேதத்தின் சிரஸாகிய உபநிஷத்துக்களில் உத்கோஷிக்கப்படும் உயர்ந்த தத்வார்த்தத்தை இந்த கீர்த்தனை மூலம் சுருக்கமாகக் கூறி விளக்குகிறார் பிரும்மேந்திராள். ஆத்ம ஸ்வரூபம் யாதென்பது இங்கு விவரிக்கப்படுகிறது. பரமாத்மாவையும், ஜீவாத்மாவையும், அவற்றின் ஸ்வரூப ஸ்வபாவங்களுடன் அனுபவிக்கிறார். அவற்றின் ஐக்கிய நிலைமையையும் அனுபவிக்கிறார். ஜீவன் முக்த நிலையிலே சுத்தாத்ம ஆனந்த நிலையில் வர்ணாச்ரமாசார கட்டுப்பாடோ, மாயையினால் ஏற்படும் பந்தமோ, எதுவுமில்லையென்பதாகத் தெரிவிக்கிறார். இதில் நான் என்பது தேகத்தினின்றும் வேறுபட்ட ஆத்மாவைக் குறிக்கிறது.

| | |
|---|---|
| அஹம் | —நான் |
| பூர்ண போத: | —குறைவற்ற அறிவுள்ளவன். ஞானஸ்வரூபன் |
| அஹம் | —நான் |
| ஸதா | —எப்பொழுதும் |
| ஆனந்த பூர்ணபோத: | —ஞானஸ்வரூபன் என்பது மாத்திரமல்ல. ஆனந்த மயமானவன். |
| அஹம் | —நான் |
| வர்ணாச்ரமாசார கர்மாதி தூர: | —வர்ணாச்ரம ஆசாரங்கள், கர்மாக்களுக்கு உட்படாதவன். மேம்பட்டவன். |
| அஹம் | —நான் |
| ஸ்வர்ணவத் | —தங்கத்தைப் போல் |
| அகில விகார கத: | —எல்லாவிதமான விகாரங்களும் அதாவது வேறுபாடுகளும் அற்றவன். எவ்வுருக்கொண்டாலும் தங்கம் எப்படி தன் உண்மை ஸ்வரூபத்தை இழப்பதில்லையோ அவ்விதமே எத்தகைய சரீர வேறுபாடுகளைக் கொண்டாலும் உண்மை ஸ்வரூபத்தை இழக்காதவன். |
| அஹம் | —நான் |
| பிரத்யகாத்மா | —சரீரத்துள் உறையும் ஜீவாத்மா |
| அஹம் | —நான் |
| ப்ரவித்த ஸத்யகன: | —எங்கும் பரந்துள்ளதான ஒரே 'ஸத்' மயமான [ஆத்மா |
| அஹம் | —நான் |
| ச்ருத்யந்த சத கோடிப்ரகஷத பிருமம் | —உபநிஷத்துக்களிலே நூறு கோடி முறை உத்கோஷிக்கப்பட்டுள்ள பிரும்மம் |
| அஹம் | —நான் |
| நித்ய: | —அழிவில்லாதவன்: என்றும் இருப்பவன் |
| அஹம் | —நான் |
| அபய: | —பயமில்லாதவன். ஸம்ஸார கோரங்களைக் கண்டு [அஞ்சாதவன் |
| அஹம் | —நான் |
| அத்விதீய: | —எனக்குச் சமமெனக் கூறும் மற்றொரு பொருள் [அற்றவன் |
| அஹம் | —நான் |
| ஸாக்ஷிமாத்ர: | —ஸாக்ஷியாக மாத்திரமிருப்பவன். பற்றின்றி பிரபஞ்சத்தில் நடமாடுபவன் |
| அஹம் | —நான் |
| ப்ரகளிதபக்ஷபாத: | —பக்ஷபாதமற்றவன். வேண்டியது வேண்டாதது என்பது எனக்கில்லை. |
| அஹம் | —நான் |
| மோக்ஷஸ்வரூபம் | —மோக்ஷ நிலையை அடைந்துள்ளவன் |
| அஹம் | —நான் |
| ஓங்கார கம்ய: | —பிரணவஸ்வரூபத்தை தியானிப்பதன் மூலம் அடையத்தக்கவன். |

| | |
|---|---|
| அஹம் ஸூக்ஷ்ம: | —நான் சூக்ஷ்ம நிலையில் உள்ளவன். புலனுக்கெட்டாத அணு ஸ்வரூபன். |
| அஹம் அனக: | —நான் தோஷமற்றவன். |
| அஹம் அத்புதாத்மா | —நான் ஆச்சர்யப்படக்கூடிய ஆத்மஸ்வரூபன். |
| அஹம் ஸ்வபிரகாச: | —நான் சுயம்பிரகாச முள்ளவன். |
| அஹம் விபு: | —நான் எங்கும் வியாபித்துள்ளவன். |
| அஹம் நிஷ்பிரபஞ்ச: | —மாயையாகிற பிருகிருதிக்கு ஆட்படாதவன். |
| அஹம் அப்ரமேய: | —நான் அளவிடக் கூடாதவன் |
| அஹம் அசல: | —நான் நிலைத்திருப்பவன் |
| அஹம் அகல: | —நான் பாகுபாடு இல்லாதவன் |
| அஹம் நிஷ்பிரதர்க்யாகண்டைகரஸ: | —எளிதில் அறியக்கூடாத ஒரே ரஸ மயமான [வன் |
| அஹம் அஜநிர்மம: | —எனது என்ற அஹங்காரமற்றவன் |
| அஹம் புதஜன பஜனீய: | —அறிவாளிகளால் அடையத் தக்கவன் |
| அஹம் அஜர: | —மூப்பில்லாதவன் |
| அஹம் அமர: | —மரணமில்லாதவன் |
| அஹம் அமிருத ஸ்வரூப: | —அமிருத மயமானவரின் |
| நிஜ பூர்ண மஹிம்னி நிஹித மகித: | —எனது நிறைந்த பெருமையினால் நிலையான [புகழ்பெற்றவன் |
| அஹம் நிரவயவ: | —அவயமில்லாதவன் |
| அஹம் நிருபம நிஷ்கலங்க: | —உபமானமில்லாத களங்கமற்ற தனிப்பொருள் |
| அஹம் பரமசிவேந்திர ஸ்ரீகுருஸோமஸமுதித நிரவதி நிர்வாண ஸுகஸாகர | —சதா சிவபிரும்மேந்திராளென்ற சந்திரனைக் கண்டு கொந்தளிப்படையும் எல்லையற்ற நிர்வாண (பரிபூர்ண பிரும்மானுபவம்) ஆனந்தானுபவமாகிய சமுத்திரம் போன்றவன். |

III

ராகம்: பூர்வகல்யாணி தாளம்: மிச்ரசாபு

பல்லவி

1. || ,, x ஸா, ஸரி - || கா, மதம—கரிகரி || ரிஸ ஸா ; — கம || பாம—கமகரி ||
x பூர்ண . - || போ ...—தோ ... || ஹம் .. — ஸ . || தா . —ந. ந்த . ||
2. || ஸத x ஷி || கமத மகரி — கமதம — கமகரி || ரிஸஸா ,,, — கம || தஸ்ாநி — தநிநித — கமதம ||
x ஷி || போ .....— தோ...— .... || ஹம் .. — ஸ . || தா . . — ந ... — ந்த ... ||
3. || கரிஸத x ஷி || மதரிஸ்நி — தமகரி-பமகரி || ரிஸஸா ,, — மதஸ்ரி || கரிஸ்நி — தநிநிதபம - கமதம ||
. . . . x ஷி || போ.....— . ....-தோ ... || ஹம் .. — ஸ ... || தா ...— ந ...... - ந்த ... ||
|| கரிஸத x ஸா, ஸரி || கா, மதம — கரிகரி || ரிஸஸா ; ; ||
. . . . x பூர்ண . || போ ... — தோ ... || ஹம் .. ||

அனுபல்லவி

1. || ,, x கமத நிம — த || ஸ்ா, ஸ்ா ஸ்ா || ,, — ஸ் ஸ்ா , ஸ் — நிதாஸ்ாநி — தபபா ; ; — பமதப ||
x வர்ண . . — ச்ர || மா சார || — கர் மா தி — து ... — ரோ . . — ஹம் ... ||
2. || பமகரி x ஷி || ஷி || ,, — ஸ் ஸ்ா , க்ரீஸ்ா || ஷி — பமநித ||
x ஷி || ஷி || — கர் மா . . தி || ஷி — ஹம் ... ||
3. || பமகரி x ஷி || ஷி || ,, — ஸ்ரிக்ாம் க்ரீஸ்ா || நிதாஸ்ாநி — தபபா ; ; — பமகா ||
x ஷி || ஷி || — கர் . மா ... தி || து ... — ரோ .. — ஹம் ||
1. || ,, x ஸ்ஸ்ா , ஸ் || நிதாநிதா தபபா , — பமகா || கா, நிதா — பாபம || க மா , த மகரிஸா ||
x ஸ்வர்ணவ || த . இ . ல . . — வி . . || கா . . — ர க . || தோ . . ... ஹம் ||
2. || ,, x ஸ் ஸ்ா , க்ரிஸ் || ஷி || கமதஸ்ாநி - தபபா , - பம || கமதரிஸ்நிதம - கமதம - கம || கரிஸத x
x ஸ்வர்ண . . வ || ஷி || கா .... - ர . . - க . || தோ ....... - ஹம் ... - .. || . . . . x (பூர்ண)

சரணம்

1. || ,,. x ஸரி ஸா — ரிஸஸத || ஸரிகா — ரிகதபபமமா || கா ; ; — ப || பா , - பா , ம - கம ||
x ரி ர வ — ய . . . || வோ .. — . . . . . . . || ஹம் — நி || ரு - ப - ம . ||
2. || கரி x ஷி || ஷி || ஷி — ப || பா, — பா பா ||
|| . . x ஷி || ஷி || ஷி — நி || ரு — ப ம ||
|| ,, x பாநித தபபா , — பா, ம || கரி — கமதம தமா , || கரி, , ஸா ; || ,,, — ,,,, ||
x நிஷ் . . க . . — ள ங் || கோ — . . . . . . || ஹம் . || ||

மற்ற அடிகளையெல்லாம் அனுபல்லவிபோல் பாடவும்.

# துர்மந்திரி:

வ. ரா.

முன் காலத்திலே அரசனுக்கு, ஒரு விதூஷகன் இருப்பான். பொழுது போக்குக்காக ராஜ்ய பாரம் நடத்தும் அரசனுக்கு, எப்படி பொழுது போகாமல் இருக்க முடியும் என்று கேட்கப்படாது. பொறுப்பும் புத்தியும் இல்லாத அரசனுக்கு எப்படி பொழுது போகும்? பொழுதை அலட்சியம் செய்யும் விகடகவியும் பொழுதைக் கொல்லும் அரசனும் ஒன்று சேருவது இயல்பானதுதான்.

இதைப்போலவே, பலவானிடத்தில் துர்மந்திரி ஒட்டிக்கொள்வது இயல்பு. துரியோதனனுக்கு துர்போதனை செய்ய துர்மந்திரியாய் வாய்த்தவன் சகுனிமாமா. ராவணனுக்கு, மகோதரன் அவ்வாறு வாய்த்தான். சொல்லப்போனால் தங்கை சூர்ப்பனகை கூட அண்ணன் ராவணனுக்கு துர்மந்திரியாகத் தோன்றினாள். சூர்ப்பனகையின் துர்போதனை இல்லாமல் போனால், ராவணன் சீதாப்பிராட்டியை தூக்கிக்கொண்டு போயிருக்கமாட்டான். ராமன் பேரில் வெறிகொண்ட சூர்ப்பனகையின் மனோரதம் பூர்த்தியாகததால், அவள் விஷமம்செய்துவிட்டாள்.

தசரதருக்கு வீர சாரத்தியம் செய்த கைகேயி லேசான ஸ்திரீ அல்ல. பலிஷ்டை என்றே சொல்லவேண்டும். அவளுக்கு துர்மந்திரியாக வாய்த்தாள் கூனி. தன் மகன் பரதனுக்குச் சமமாகவும் அதற்கு மேலாகவும் கூட ராமனைப் பாவித்து வந்த கைகேயியின் மனதை மாயக்கார கூனி சன்னம் சன்னமாக அடியோடு மாற்றி விட்டாள்.

சர்ச்சிலுக்கு இப்பொழுது துர்மந்திரியாக வாய்த்திருப்பவர் அமெரி. சகுனி முதல் அமெரி வரையில் உள்ள துர்மந்திரிகள் தன்மையில் மிகச் சிறியவர்கள் அப்படி இருந்தும் அவர்கள் சரித்திரத்திலும், புராணத்திலும் இடம் பெற்று விடுகிறார்கள். மகாபாரதப் போரை உண்டாக்கியவன் சகுனி. ராமாயணத்தின் போக்கை மாற்றியவள் கூனி. ரஷ்யப் புரட்சிக்கு முக்கிய காரணமாய் நின்று, அதைத் தூண்டியவன் ராஸ்புட்டீன் என்ற பாதிரி.

ராஸ்புட்டீன் தன்மையில் மிகச் சிறிய மனிதன். பயமுறுத்தும் வேலையில் அவன் நிபுணன். அவன் ரஷ்யஜார் குடும்பத்தாரைப் பயமுறுத்தி தன் கைக்குள் போட்டுக்கொண்டான். ஜனங்களை நசுக்க, ஜாருக்கு துர்போதனை செய்தான். பயத்தைக் கையாண்டு, பிரஜைகளை ஆளலாம் என்று யோசனை சொன்னான். இதன் பலன் என்ன? அவன் சுட்டுக்கொல்லப்பட்டான். ஜார் குடும்பம் நாசமாய்ப்போயிற்று. ரஷ்யப் புரட்சி பலித்து விட்டது.

ராஸ்புட்டீனைப் போன்றவர்கள் சிறிய பேர்வழிகளாய் இருந்தபோதிலும், அவர்கள், உலகத்தின் போக்கையேமாற்றி விடுகிறார்கள். காரணம் என்ன? பார்வைக்கு பலசாலிகளாக தோன்றுபவர்கள் இந்த சிறிய மனிதர்களிடம் சிக்கிக்கொள்ளுகிறார்கள். சிக்கிக் கொண்டதும், சிறிது பெரிது என்ற வித்தியாசம் இல்லாமல் போய் விடுகிறது.

சகுனியைப் போன்றவர்கள் ஏன் துர்போதனை செய்ய வேண்டும்? துர்போதனை செய்வது அவர்களுடைய சுபாவமா? சுபாவம் என்றுதான் தோன்றுகின்றது. ராம பட்டாபிஷேகத்தை நடக்காமல் கூனி செய்தாளே, அவள் ஏன் அவ்வாறு செய்யவேண்டும்? ராமன் எப்பொழுதாவது கூனியை அவமானப்படுத்தினாரா? அவமானப்படுத்தினதே இல்லை. அப்படி இருந்தும் ராமன்பேரில் பழி வாங்குவதைப் போல, கூனி காரியம் செய்துவிட்டாள்.

துர்மந்திரிகளின் சுபாவமே விநோதமானது. அவர்களுடைய புத்தி கோணல் புத்தி. எனவே உலகம் நேராகச் சென்றுகொண்டிருந்தால், அதைக் கோணல் பாதையில் போகச் செய்யப்பார்ப்பது அவர்களுடைய சுபாவமாகும். தேள் கொட்டுவது அதனுடைய சுபாவமாகும். அதைப்போல துர்மந்திரிகளின் துர்போதனையும் அவர்களுடைய சுபாவமாகும். ஊரெல்லாம் ஒருவழி நடக்க, துர்மந்திரி தனி வழி நடப்பதுதான் அவனுடைய சுபாவமாகும்.

சாதாரணமாக சுகத்தைக் கண்டு சந்தோஷப்படுவது மனித இயற்கை. ஆனால் புலியின் தன்மை வேறு விதமானது என்று சொல்லுகிறார்கள். தான் பாய்ந்த மிருகத்தை துன்புறுத்தி அது அலறுவதைப் பார்த்தால், புலி சந்தோஷப்படுமாம்.

உலகத்தில் புலியைப்போன்ற மனிதர்கள் இருக்கிருர்கள். அவர்களுக்கு உலகத்தின் சந்தோஷமும், சுபிட்சமும் பிடிப்பதில்லை. உலகம் துர்பிட்ச நிலைமையில் இருந்து, துக்கப்படுவதை பார்ப்பதிலேதான் இவர்களுக்குச் சந்தோஷம். ஆகையிஞல், துர்மந்திரிகள் கொள்கை உடையவர்கள் என்றே சொல்ல வேண்டும். அவர்கள் அதிகார ஆசையிஞலோ அல்லது சொந்த சுகத்தைக் கருதியோ, துர்போதனைப் பாடம் படிப்பதில்லை. கூனி கூனியாகத்தான் இருந்தாள். சகுனி சக்கரவர்த்தியாகிவிடவில்லை. மகோதரன் பெரிய ராஜ்யாதிபதியாக ஆகிவிடவில்லை. சூர்ப்பனகைக்கு பட்டமகிஷி பட்டமும் கிட்டவில்லை.

எனவே, துர்மந்திரிகள் துர்போதனை செய்து உலகத்தை பாழாக்கப்பார்ப்பது அவர்களுடைய சுபாவத்திஞல்தான். நாரதருக்கு கலகத்தில் பிரியம் என்கிருர்கள். கலகம் செய்வது அவருடைய சுபாவம் என்றுதான் கொள்ள வேண்டும்.

துர் மந்திரிகளை நாம் ஏசலாகாது. ஒருவன் தனக்கு இயல்பாயுள்ள சுபாவத்தை வெளிக்காண்பித்தாஞகில், அவன் உண்மையை மறைக்கவில்லை என்று நாம் சந்தோஷப்பட வேண்டும். அதற்காக அவனை ஏசவும் பேசவும் கூடாது. மேலும் துர் மந்திரி உலகத்தில் இருப்பதாலேதான், நல்ல முறைகளுக்கு, நேர்மையான வழிகளுக்கு அர்த்தமும் தேவையும் மதிப்பும் உண்டாகின்றன.

வெயில் கடுமையாக காயாமல் போஞல், நிழலுக்கு மதிப்பும், தேவையும் ஏற்படமாட்டா. மழை விடாமல் பெய்தால்தான் வீட்டுக்கு அவசியம் உண்டாகின்றது. இரவு இல்லாமல் போஞல், பகலுக்கு மதிப்பிருக்காது. இருட்டு இல்லாமல் போஞல் வெளிச்சத்தை யாரும் கொண்டாடமாட்டார்கள். உள்ளே இருந்து வில் முடுக்கும் துர் மந்திரிதான் உலகத்தின் முற்போக்குக்கு சூட்சுமமான காரணமாய் விளங்குகிருர். தேசத் துரோகியின் ஈனச் செயலிஞல், தேச பக்தி வீறிட்டெழுகின்றது.

அமெரியைப்போன்ற துர்மந்திரியின் துர்போதனையால்தான் இந்தியா ஒற்றுமைபட்டு முன்னேறப் போகின்றது.

துர் மந்திரிகள் விரல் வைத்து அமுக்கும் சுரங்கள் மூன்று கூனி, கைகேயியின் மனதை எப்படி மாற்றிஞள்? முதலில் பொருமை என்ற சுரத்தில் கை வைத்து அழுத்திஞள். பிறகு கைகேயியின் சுய நலத்தை தொட்டாள். பின்னர் கைகேயியின் பயத்தின் பேரில்

(24-ம் பக்கம்)

## ஜயஸ்தம்பம்

(10-ம் பக்கத் தொடர்ச்சி)

ந்து விட்ட ஜனங்கள், அந்தப் பட்டப்பெயரை மட்டும் என்றும் பசுமையாக நினைவில் வைத்துக்கொண்டு, "அவன் இரண்டாயிரம் ஆண்டுகள் ஆண்டான்; உஜ்ஜயினி மகாகாளியின் வரப் பிரசாதத்தால் ஆண்டு வந்தான், வேதாளம் பணிசெய்ய அமானுஷ்யச் செயல்கள் புரிந்தான்!" என்றெல்லாம் கதை கட்டி விட்டார்கள்—என்று கருதலாம்.

## சீனன் கண்ட செல்வ இந்தியா

இவன் காலத்திலேதான் பாஹியன் என்ற பிரசித்திபெற்ற சீன யாத்திரிகன் இந்தியாவுக்கு வந்திருந்தானும். விக்கிரமாதித்தன் ஆட்சியில் பொங்கிக்கொண்டிருந்த பொருட் செல்வத்தையும் அறிவுச் செல்வத்தையும் கண்ணாரக் கண்டு களித்தானும்; காதாரக்கேட்டு மகிழ்ந்தானும்.

இந்துக்கள் ஒரு தேசிய மறுமலர்ச்சி பெற்றுச் சுதந்திர லட்சுமியின் அருளால் மகோன்னத நிலையுற்று வந்த காலம் அது. இந்திய ஞான திபம் விசேஷமாக ஒளி வீசி வந்த காலம் அது. "அரசனை ஜனங்களுடைய வேலைக்காரனுகப் படைத்தான் பிரமதேவன்" என்ற அர்த்த சாஸ்திர அரசியல்—கொள்கை நிலவி வந்த காலம் அது. அதே கொள்கைப்படி ஆட்சி செலுத்திய விக்கிரமாதித்தன், கவிதைப் பயிரை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்ததோடு, கணிதம் வான சாஸ்திரம் தர்க்கம் முதலான அறிவுக் கலைகளையும் மாட்சி பெற வளர்த்துவந்த காலம் அது. அரசியலும் சட்டமும் கூடக் கலைகளாக வளர்தோங்கிய காலம் அது.

சீன யாத்திரிகனை பாஹியன் பௌத்த தர்மத்தைப் பின்பற்றியவன்; இந்து தர்மத்தை விசேஷமாய்ப் பாராட்டவில்லை. எனினும் அவனே அந்தக் காலத்து இந்திய ஜனங்கள் செல்வத்திற்கும் ஒழுக்கத்திற்கும் பேர் போனவர் என்று ஒப்புக் கொள்கிறுன். ரஸ்தாக்களிலே யாத்திரிகர்கள் தங்கி உண்டு களை தீர்ந்து போவதற்குத் தர்ம சாலைகள் சக்கரவர்த்தியால் அமைக்கப்பட்டிருந்தன என்கிறுன். அந்த அரசாங்கம் மதத்துவேஷம் இல்லாமல் பௌத்த யாத்திரிகர்களையும் போஷித்து வந்ததாம். வேதங்களைக் கண்டித்து வந்த பௌத்த மதத்தின் மீதும் வேதம் விளங்க அரசு செலுத்திய சக்கரவர்த்திக்குத் துவேஷமே கிடையாதாம்.

## ஒற்றுமையும் ஒருமையும்

எல்லாவற்றுக்கும் மேலாக' இந்தியாவின்ஒருமையையும் ஒற்றுமையையும் ஞாபகப்படுத்துகிறது விக்கிரமாதித்தன் ஆட்சி. பௌத்தர்களைப்போல் வாழ்க்கையைக் கேவலம் துறவுக்கு ஒரு சந்தர்ப்பமாகக் கொள்ளாமல், கலை வளர்ப்புக்கும் வீர விளைவுகளுக்கும் பண்ணையாகவே வாழ்வை மதித்ததாம் விக்கிரமன் ஆட்சி. ஜெர்மன் ஷேக்ஸ்பியர் என்று சொல்லப்படும் கேதே என்பவரும் புகழ்ந்து பேசும் பெருமை வாய்ந்த சாகுந்தலம் என்ற நாடக ரத்தினத்தை தோற்றுவித்ததும் விக்கிரமன் ஆட்சிதான் என்றுல், அந்த மாட்சியை என்னென்பது?- என்கிறுர்கள். சுருங்கச் சொன்னுல், விக்கிரமன் ஆட்சியில் பாரத ராணி எப்படியோ யௌவன சிகிச்சை செய்து கொண்டு நவயௌவன வீர சுந்தரியாக விளங்கினுள் என்று சொல்லுகிறுர்கள்.

சண்டையிலும் சமாதானத்திலும் ஒருங்கே சூரியனுகப்பிரகாசித்தானும் விக்கிரமாதித்தன். விக்கிரமாதித்தன் என்ற பெயருக்கே வீரசூரியன் என்று பொருள். 'விக்கிரமன்' என்ற சொல் தமிழிலக்கியத்திலும் 'வீரன்' என்ற பொருளில் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. 'விக்கிரமம்' என்ற சொல்லை 'மிகுந்த பலம், விசேஷ சாமர்த்தியம், ஒப்பற்ற பராக்கிரமம்-' என்ற பொருள்களில் தமிழறிஞர்கள் உபயோகித்திருக்கிறுர்கள். வீரம் காட்டுவதை 'விக்கிரமித்தல்' என்றே சொல்லுகிறுர் திருப்புகழ் ஆசிரியர். எனினும் வீரத்திலும் போரிலும் பெரியவனுக ஜொலித்த விக்கிரமாதித்தன், சமாதானத்திலும் ஒற்றுமையுணர்ச்சியிலும் இன்னும் பெரிய சூரியனுகச் சுடர் வீசி நாட்டுக்குப் புத்துயிர் அளித்தான் என்பது திண்ணம்.

* * * *

## ஞான சூரியன்

விக்கிரமாதித்த சகாப்தத்தின் இரண்டாயிர வருஷ விழாவைக் கொண்டாட விரும்பும் இந்தியர்கள் சுவாமி விவேகானந்தரின் 82-வது ஜயந்தியையும் கொண்டாடி வருகிறுர்கள். தன்னுடைய திக்விஜய முயற்சிகளாலும் சமாதான முயற்சிகளாலும் இந்து தர்மத்திற்கும் இந்து

நாகரிகத்திற்கும் ஜய ஸ்தம்பம் நாட்டினான் விக்கிரமாதித்தன். அந்த மன்னனை ஒரு வீர சூரிய னென்றால், விவேகானந்தரை ஒரு ஞான சூரியன் என்று சொல்ல வேண்டும். விவேகானந்தர் இந்தியாவுக்கு வெளியே போய் மேல் நாடுகளிலும் திக் விஜயம் செய்து இந்து தர்மத்தை நிலை நாட்ட முயன்றார்.

விக்கிரமாதித்த வீரன் ஞானத்தையும் போற்றினான். விவேகானந்த ஞானி வீரத்தையும் போற்றினார். விக்கிரமாதித்தனால் இந்துமதம் புத்துயிர்



பெற்றது; விவேகானந்தரும் சமீபகாலத்திலே இந்துமதத்திற்குப் புத்துயிரளிக்க முயன்றார். விக்கிரமாதித்தனும் தேச பக்தன்; விவேகானந்தரும் தேச பக்தர். இருவரும் பொதுஜனங்களுக்காக உழைத்தார்கள்; இந்து ஜனங்களெல்லாம், "நாம் எல்லாரும் இந்நாட்டு மன்னர்!" என்று தலை நிமிர்ந்து வாழும்படி பொதுஜன சேவை செய்தார்கள். நமது சமுதாய உடம்பில் தோன்றிய நோய்களைக் காலத்துக்கு ஏற்ற வைத்திய முறைகளைக் கையாண்டு குணப்படுத்திய மருத்துவர்கள் இந்த இருவரும்.



விவேகானந்தரும் நமது அரசியல் விமோசனத்திலே கண்ணும் கருத்துமாயிருந்தார். வாழ்க்கை, துறவுக்கு ஒரு சந்தர்ப்பம் என்ற போலி வேதாந்தத்தை இந்தத் துறவியும் ஒப்புக்கொள்ள வில்லை. இவருடைய தோற்றத்திலும் ஓர் அரசனுடைய மாட்சியைப் பார்த்தோம்!-என்கிறார் நிவேதிதை அம்மையார். இந்த ராஜ ரிஷியும் இந்தியாவின் ஒருமைக்காகவும் ஒற்றுமைக்காகவும் இராப் பகலாக உழைத்து வந்தார். இந்தியா ஞானத்துறையிலும் அரசியல் துறையிலும் ஜய ஸ்தம்பம் நாட்டுவது என்னாளோ?-என்று கனவு கண்ட வண்ணமாயிருந்தார் விவேகானந்தரும் விக்கிரமாதித்தனைப் போலவே!

* * * *



இன்று நமக்கு ஒரு சோதனைக்காலம். சோர்வினால் இந்தப் பரீட்சையில் நாம் தவறி விடலாகாது; நம்முடைய சுதந்திர சங்கல்பத்தை நழுவ விடலாகாது; மங்க விடலாகாது. விக்கிரமாதித்தனும் விவேகானந்தரும் ஜவஹர்லால் மூலமாகவும் காந்தியடிகள் மூலமாகவும் ஆவேசித்து இந்தச் சந்தர்ப்பத்திலே நாம் எப்படி நடந்து கொள்ளுகிறோம் என்பதைக் கவனித்துக்கொண்டிருக்கிறார்கள்.

# "அவனுடைய பலம் எங்கிருந்து வருகிறது"

இதர ஸ்திரீகள் தன்னுடைய குழந்தையைப் பற்றி புகழ்ந்து பேசும்போது தாய்மார்களுக்கு எவ்வளவு சந்தோஷம் உண்டாகிறது. தங்கள் குழந்தைகள் தேக ஆரோக்கியமாக இருக்க அவர்கள் எடுத்துக் கொள்ளும் சிரமம் மெச்சக்கூடியது. போதிய பலம் இல்லாத குழந்தைகள் சீக்கிரம் சக்தியை இழந்து ஆரோக்கியத்தையும் கெடுத்துக் கொள்ளுகிருர்கள்.

உங்களுடைய குழந்தைகளுக்கு விடமின் கூடினதும், போஷாக்கை அளிக்க வல்லதுமான ஆகாரத்தைக் கொடுப்பது அத்தியாவசியம். இந்த சமயத்தில்தான் விடமின் சேர்ந்த டால்டா நன்கு உதவுகிறது டால்டாவினுல் ஆகாரத்திற்கு சேர்க்கப்படும் விடமினும், ரக்ஷண சக்தியும் தான் பலத்திற்கும், ஆரோக்யத்திற்கும் காரணம். குடும்பத்திலுள்ளவர்களுக்கு பலம் அவசியமாகையால் வேண்டிய ஆகாராதிகளை டால்டாவினுல் சமையல் செய்யுங்கள். டால்டாவினுல் செய்த உணவுகளை எல்லோரும் விரும்புவதும் தவிர அதிக ருசிகரமாகவும் இருக்கிறது.

*விடமின் சேர்ந்த டால்டா சரீரத்தை திடகாத்திரமாக வளரச் செய்யவும், குறைந்த பலத்தை ஈடு செய்யவும் உதவுகிறது . . .*

*விடமினுடன் சேர்ந்த டால்டா ஓர் சிறந்த ஆகார வஸ்து. அது சக்தியைத் தரத்தக்கது. உணவுகளை டால்டாவினுல் தயார் செய்தால் ஆகாரத்திற்கு அதிக சக்தி கிடைக்கிறது. அநேக உணவுப் பொருள்களில் விடமினும், சக்தியும் குறைவாக இருப்பதால், டால்டாவினுல் உணவுகள் தயாரிப்பது ஓர் சிறந்த முறை. அது பாலர்களுக்கும், விருத்தர்களுக்குங்கூட நல்லது.*






## விடமின் சேர்ந்த டால்டா

தாவர எண்ணெயால் தயார் செய்யப்பட்டதென்று உத்திரவாத முள்ளது—
சீல் செய்த டின்களில் விற்கப்படுகிறது

HVM. 20-193 TM

THE HINDUSTAN VANASPATI MANUFACTURING CO., LTD., BOMBAY

## துர் மந்திரி

(20-ம் பக்கத் தொடர்ச்சி)

ப்பாய்ந்தாள். மூன்றும் சேர்ந்து கைகேயின் மனதை மாற்றிவிட்டன.

ராமனுக்கு பட்டாபிஷேகமானால், பரதன் பவிஷு இல்லாமல் போய்விடுவான் என்று முதலில் பொறாமைக் கனலை மூட்டினாள். பரதனுக்கு பட்டம் சூட்டினால், தாயாகிய கைகேயிக்கு பெருமை என்று சுயநலத்தை, கூனி குறிப்பிட்டாள். ஒன்றுமில்லாமல் போனால், கைகேயின் நிலைமை என்னவாகும் என்ற பயத்தை எழுப்பிவிட்டாள். மூன்றும் தக்க சேர்மானங்களல்லவா?

மனித சமாஜத்தில் கீழ்மையான தன்மைகள் வெகுவாக லீலைகள் செய்யும் சந்தர்ப்பங்களிலேதான், மேன்மைக் குணங்கள் தோன்றுவதற்கு தூண்டுதல் ஏற்படுகின்றன. இது வெறும் தத்துவமல்ல என்று கீதை சொல்லுகின்றது. 'அதர்மம் நிறைந்து, தர்மம் மறையும் காலையில், நான் அவதரிப்பேன்' என்று கண்ணன் சொன்ன வார்த்தைகளுக்கு என்ன அர்த்தம்?

தீய சக்திகளினால் உலகம் பாழாய்ப்போகும். ஆனால் உலகம் பாழாய்ப் போகும்படியாக இயற்கை விடுவதில்லை. எனவே தீய சக்திகளை வெருட்டி அடித்து வெற்றி பெறுவதற்காக, நல்ல சக்திகளைத் தோற்றுவிப்பது இயற்கை செய்யும் வேலையாகும். ஆகவே எந்த சமயத்தில் கெட்ட தன்மைகள் அதிகமாக இருக்கின்றனவோ, அதே சமயத்தில் மேன்மையான தன்மைகளையும் காணலாம். உலகம் கொலைக்களமாக இருக்கும் இந்த சமயத்திலே தான், உயிர் வாங்கும் வித்தையை அடியோடு வெறுக்கும் கருணைக் கடலான காந்தி அவதரித்திருக்கிறார் என்பது இயற்கையின் சட்டத்துக்கு மிகவும் பொறுத்தமானது.

அசுரர்கள் தோன்றாவிடின் அவதாரங்களும் தோன்ற மாட்டார்கள். துர்மந்திரி இல்லாவிடில், தர்ம வழியும் கண்ணில் தென்படாது. எனவே துர்மந்திரிகளும் உலகத்துக்கு ஒரு வகையில் தொண்டு செய்கிறார்கள் என்பது கற்பனையல்ல. அது அடிப்படையான உண்மையாகும்.

# நாக கன்னிகை




## 15

## 'நள்ளிரவில்'



**வ. வேணுகோபாலன்**

கவிழ்ந்த தலையுடன் சோர்ந்து உட்கார்ந்திருந்தான் சோழவேந்தன். இடையிட்டு விடும் பெருமூச்சால் அவன் தோள்கள் எழுந்து பூரித்து உள்ளொடுங்கின. கையொடுகை புடைத்துத் தீவிரமாக ஆலோசித்தான். நாழிகை ஆவதையும் உணராமல் சிந்தனையில் ஒன்றியிருந்தான். அவன் சிந்தனை முற்றும் நாககன்னிகை வசமாகவே இருந்தது. நாககன்னிகை வெறுத்துக் கூறிய வார்த்தைகள் அவனை அச்சுறுத்தி வருத்தியவாறே இருந்தன. அவள் அழகு வடிவம் அவன் உள்ளத்தை விட்டு அகலவே இல்லை. அவளை நினைந்து நினைந்து மனம் கலங்கினான். அவள் வெறுப்பிற்குத் தான் ஆளாவதா என்று மனம் நொந்தான். அவள் மனம் நொந்து தன்னை இகழ்ந்து பேசும்படி, தான் நடந்துகொண்டதைப்பற்றிக் கலங்கினான். அவளை எவ்வாறாவது மகிழ்வடையும்படிச் செய்யவேண்டுமே என்று கவலை கொண்டான். அவள் மனத்திலுள்ளகோபத்தை மாற்றி, தன்னிடம் நேயம் நிலை கொள்ளும்படி செய்ய வேண்டும் என்று ஆலோசித்தான். தீவிர ஆலோசனையிலே ஆழ்ந்திருக்கும் அவனைக் கண்டு சோழிக ஏனாதி-மந்திரி திகைப்படைந்தான். அருகில் நின்றவாறே, வேந்தனின் முகத்தைப் பார்ப்பதற்கு-அவனுடன் பேசுவதற்கு, ஆயத்தமாய் நின்றான். அவன் அருகில் வந்து நிற்பதையும் வேந்தன் உணரவில்லை. சிந்தனையில் சொக்கியிருந்தான்.

### ஏனாதியின் திகைப்பு

சோழவேந்தன் நாககன்னிகை வசம் அகப்பட்டு மயங்கத் தலைப்பட்டது தொடங்கி சோழநாட்டின் ஆட்சிப் பொறுப்பு யாவற்றையும் அரசன் போல் இருந்து நேர்மையுடன் தாங்கி வந்தவன் சோழிக ஏனாதி. அவன் அவ்வாறு எவ்வளவு காலம் ஆட்சிப் பொறுப்பைத் தாங்கிக்கொண்டிருக்க முடியும்? முடி மன்னன் ஓர் இளநங்கையின் காதலில் மயங்கியிருக்க, அவன் மந்திரி நாட்டை ஆளுவது என்றால் எவ்வளவு காலம் அது நீடித்திருக்க முடியும்? அரச காரியங்களை ஏற்றுத் தக்கவாறு நடந்து கொள்ளும் திறமை சோழிக ஏனாதிக்கு முற்றும் போதிய அளவுக்கு இருந்தது; எனினும், அவ்வாறே காலம் நீடிக்குமானால் பல கேடுகள் உண்டாக ஏதுவாகும் என்பதை அவனே உணர்ந்தவனாய் அன்று அரசன் வந்திருக்கையில் தன் கருத்தை வெளியிட எண்ணியிருந்தான். ஆனால், அரசனின் நிலையை அவன் அப்போது கண்டதும் திகைப்படைந்தவனாய் நின்றான். நீண்ட நாழிகை நின்றான்.

'தாம், தாம்' என்று தண்ணுமையின் ஓசை கேட்டது. அவ்வளவில் சட்டென்று தலை நிமிர்ந்தான் அரசன். அவன் இருந்த மண்டபத்தில் நானாபுறமும் மணி விளக்குகள் ஏற்பட்டன. ஒளி மயமாக விளங்கியது மண்டபம்; 'அதற்குள் இரவு வந்து விட்டதா?' என்று மயங்கினான். 'கல் கல்' என்ற ஒலியுடன் பெண்டிர் நர்த்தனம் செய்யும் சப்தம் கேட்டது. உள்ளத்தைக் கவரும் இனிய கீத ஓசை செவியிலே புகுந்தது. வீணை, பேரியாழ், சகோடயாழ், முரசம் முதலிய வாத்தியங்கள் பலவகை இன்னொலியை உண்டாக்கின. 'இப்போது அவளை விட்டுப் பிரிந்து நான் இங்கே இருக்கிறேனே! அவளை எவ்வாறு அணுகுவது?' என்று ஆலோசித்தவனாய்த் திரும்பி நோக்கினான். சோழிக ஏனாதியைக் கண்டான். உடனே அவன் வணங்கி எதிர் வந்து நின்றான்.

### நீலன் என்ன செய்தான்?

"சோழிக, ஏன்? இங்கே எப்போது வந்தாய்?" என்று சோழன் கேட்டான்.

"சிறிது நாழிகையாகத்தான்."

"உன்னிடம் ஒன்று சொல்ல எண்ணுகிறேன் அதாவது...... இப்போது நாககன்னிகை என் மீது கோபம் அடைந்திருக்கிறாள்......"

"ஏன்? காரணம் என்ன?" என்று வியப்போடு கேட்டான் சோழிகன்.

"வேறு என்ன? எல்லாம் அந்த நீலனால் தான்!"

"நீலனா? அவன் என்ன செய்தான்?......"

"எப்படியோ அவளுக்கு என்னிடம் கோபம் உண்டாகியிருக்-

கிறது; நான் முன்பே சீர்த்தியை மனைவியாகப் பெற்றிருப்பதை அவள் இப்போது தான் அறிந்து கொண்டிருக்கிறாள்! அதனால் அளவற்ற கோபம் என் மேல் உண்டாகியிருக்கிறது. எல்லாவற்றையும் நீலன் தான் சொல்லியிருப்பான்! என்னவோ அவள் கோபம் அளவுக்கடங்காமல் பொங்குகிறது......என்னைக் கண்டவளவிலே தீயைப்போல் எரிந்து விழுந்தாள் இன்றைக்கு! என்ன செய்வது?"

அவள்
தொடர்பை......

"என்ன செய்ய முடியும்? அரச குலத்தில் பிறந்த அவள் நீதி தெரிந்தவள்! அகம் கொண்டவள்; அவளிடம் தாங்கள் காதல் கொண்ட அப்போதே கூறினேன்! அவள் தொடர்பு பெருங்கேட்டை உண்டாக்கும் என்றும் சொன்னேன்! அல்லாமல், நீலன் பெரும் சூழ்ச்சிக்காரன் என்றும் சொன்னேன்! அவளை இனி எவ்வாறு சமாதானம் செய்ய முடியும்? அவள் தொடர்பு ஏற்பட்டபின் நாட்டிலே தங்களுக்குப் பலவாறு பழிச் சொல் உண்டாயிற்றே அன்றி வேறு என்ன பயன்? அவளுடன் தாங்கள் பொழுது போக்கும் காரணத்தால் பொறுப்பு யாவும் என்னைப் பொறுத்ததாகி விட்டன. இப்படியே இன்னும் சில நாட்கள் சென்றால் நாட்டில் அமைதி குலைந்து கலகமே ஏற்படும்! இந்தப் பொறுப்பை எவ்வளவு காலம் நான் ஏற்று நடத்த முடியும்? தாங்கள் இவ் விஷயத்தில் ஆலோசனை செய்து அவள் தொடர்பை......"

"ஏனாதி! எனக்குத் தெரியும் எல்லாம்! அவளைப் பிரிவது என்பது என்னால் இனி முடியாது. என் உயிருக்கு உயிராக உள்ளவள் அவள்! அவளின்றி நான் இல்லை. என்னையின்றி அவளில்லை. என்னைப் பிரிவது என்பது அவளுக்கும் முடியாதது. ஒரு மாதத்திற்கு மேலாக என்னுடன் உடலும் உயிருமாக ஒருங்கிருந்த அவளை என்னால் பிரிய முடியாது. அவள் தொடர்பை நான் விடவே முடியாது. அவள் உள்ளத்தைக் குளிரச்செய்து அவள் அணைப்பை மீட்டும் நான் பெறும் வரையில் என் மனம் வேறு எதிலும் செல்லாது! ஏனாதி! என் கட்டளை: உனக்காகக் குடிமக்கள் அடங்கியிருக்கவில்லை. சோழ குலத்தின் கோடாச் செங்கோலுக்கு அடங்கியிருக்கின்றனர். போ என் ஆணை! என் நண்பன் சிறுகுடி கிழான் பண்ணன் இருக்கையில் உனக்கேன் வீண் கவலை? அவனிடம் வேண்டுமானால் உதவியைப் பெற்றுக்கொள்" என்றான் கிள்ளி. ஏனாதி வாய் திறவாமல் தலை பணிந்தான்.

"வேந்தன் ஆணை வாழ்க" என்று கூறியவனாய் அவ்விடம் விட்டு அகன்றான்.




அரசன் நிலை கண்டு ஏனாதி திகைத்தான். நீண்ட நாழிகை நின்றான். ஒளிமயமாக மண்டபம் விளங்கவே "அதற்குள் இரவு வந்து விட்டதா?" என்று மயங்கினான் மன்னன்.

கிள்ளியின் நண்டன்
பண்ணன்

"சிறு கிழான் பண்ணன் என்பவன் நெடுமுடிக்கிள்ளிக்கு உயிர் நண்பன்; அவன் சோழ

னுக்குத் தன் உயிரையும் அளிக்க வல்லவன். அவனிடம் சோழனுக்கு அளவற்ற அன்பு உண்டு. அதனால் சோழன் அவனைத் தன் படைத்தலைவனாகவும் நண்பனாகவும் கொண்டிருந்தான். அவனுக்கு நாட்டு மக்கள் யாவரும் அடங்கி வாழ்வார்கள் என்பதை உணர்ந்திருந்த சோழன் அவனை உதவிக்கு அழைத்துக் கொள்ளும்படி சோழிக ஏனாதிக்குச் சொன்னான். பண்ணனின் நினைவு வந்தவுடன் சோழன் சிறிதே ஊக்கம் கொண்டான். சோழிக ஏனாதி புறப்பட்டுச் சென்ற அளவில் அவன் மனம் ஒரு வித உபாயத்தை நாடியது. தன் நண்பன் பண்ணனைக் கொண்டு தன் கருத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று குதூகலித்தான். நாககன்னிகையின் கோபத்தை மாற்றுவதற்கும் பண்ணனையே உதவியாகக் கொண்டு பயன் அடையலாம் என்று உறுதி செய்தான். மறுகணமே, பண்ணனை அழைத்து வருமாறு ஏவலாளை அனுப்பினான்.

“நாககன்னிகைக்குச் சமாதானம் கூறி என்னிடம் அவளுக்கு நேயம் நிலை பெறும்படிச் செய்ய வல்லவன் பண்ணன் ஒருவனே! அவனைப் போல் உபாயம் வல்லவனும் கவர்ச்சியுடையவனும் இந் நகரில் வேறு யார் இருக்கிறார்கள்? அந்த நீலனை வஞ்சனையால் வென்று இன்றே அவனைச் சிறை செய்யவல்லவன் பண்ணன் ஒருவனே; ஆம்! அவனுடைய கோபத்தையும் வளர்க்காமல் அவன் சூழ்ச்சியையும் முற்ற விடாமல் இன்றே இவ்விரவிலேயே காரியத்தை முடிக்க வேண்டும். என் அறிவே எனக்கு இச்சமயம் இந்த உபாயத்தைத் தோற்றுவித்தது! என் ஊழ்வினை எனக்கு நாககன்னிகையின் இன்பத்தை நிலைபெறும்படிச் செய்யட்டும்” என்று தனக்குள் கூறிக் கொண்டே பண்ணனின் வரவை எதிர்பார்த்திருந்தான்.

### பண்ணனுக்கு ஆக்ஞை

பண்ணனும் அவ்வளவிலே அரசன் முன் தோன்றினான்.

“ஏன், இரவிலே இப்படி அழைத்தீர்கள்? ஏதேனும் பிரதான காரியம் உண்டா?” என்று பணிவுடன் பண்ணன் கேட்டவாறே அரசனை வணங்கினான்.

“பண்ண! நான் வாழுநாளும் நீ வாழ்க! உன்னால் ஆகவேண்டிய காரியம் இருக்கிறது; அதுவும் இன்று இரவிலேயே செய்து முடிக்க வேண்டியதாக இருக்கிறது” என்று கூறிக் கொண்டே அவனை அருகில் உட்காரும்படிக் குறிப்பிட்டான்.

“அப்படியா! நான் அந்தக் காரியத்தை நிறை வேற்றினால் பெரும் பாக்கியம் செய்தவனாவேன். அந்தக்காரியம் என்ன என்று...” எனப் புன்னகை பூத்தான்.

“நாககன்னிகைக்கும் எனக்கும் பகைசெய்து அவளைக் கொண்டு போகப் பார்க்கிறான் நீலன்; இன்று மாலையில் அவள் என்னிடம் மிகுந்த கோபமுடன் பேசி விட்டாள். எனக்கு முதல் மனைவி இருக்கையில் அதை மறைத்து அவளைக் காதலித்து விட்டேன் என்பது காரணம்; பேதை! அரசகுலத்திற்கு இது புறம்பானதல்ல என்பதை அவள் அறியாள். எல்லாம் நீலன் சூழ்ச்சி. ஆதலால் அவனை நாளை விடியுமுன் பிடித்து உன் காவலில் பிறர் அறியாமல் வைத்து விட வேண்டும். அப்புறம் நாககன்னிகையை எளிதில் அடக்கி விடலாம்” என்று சுற்றும் முற்றும் பார்த்துக் கொண்டே கூறினான். பண்ணனுக்கு எல்லாம் விளங்கின. நீலன் சூழ்ச்சியைப்பற்றி அரசன் பன்முறை அவனிடம் சொல்லியிருந்தானாதலால், இப்போது அவனுக்கு முற்றும் விளங்கின. அரசன் கட்டளையைச் சட்டென்று ஏற்றுக் கொண்டான். ஆனால் அவன் மனம், ‘நாககன்னிகை விஷயத்தில் அரசன் செய்தது தவறுதான்’ என்பதை அறிந்துகொண்டது. அதற்காக அவன் அரசனுக்குப் புத்தி கூற எண்ணவில்லை. தன் ஆருயிர் நண்பன் என்ற முறையிலும், சோழநாட்டின் முடிமன்னனின் கட்டளைக்கு அடங்க வேண்டும் என்பதை எண்ணியும் அதற்கு உடம்பட்டான். மன்னனின் முகத்தை ஏறிட்டு நோக்கினான். “தங்கள் கட்டளையை விரைவிலே நிறைவேற்றிவிடுகிறேன்; நாளைக்கே, விடியுமுன்பாக தாங்கள் நினைத்தபடி காரியம் நிறைவேறும். தாங்கள் கவலையின்றி இன்று களைப்பாறலாம்; நான் போய் வருகிறேன்” என்று சொல்லிவிட்டு உடனே அகன்றான்.

வேந்தன் நெடுமுடிக்கிள்ளியும் சிறிதே ஆறுதல் கொண்டான். பண்ணன் தன் கருத்தை நிறைவேற்றுவான் என்று உள்ளம் களித்தான். நாககன்னிகையின் கோபம் விரைவில் தணிந்துவிடும்படியான உபாயத்தையும் ஆராயத் தலைப்பட்டான். நீண்ட நாட்களாகக் கவலையின்றி இருந்த அவன் மனம் அன்று பெரிதும் அல்லலுற்றது. நாககன்னிகையின் நினைவிலேயே செய்கையற்றவனாய் மஞ்சத்திலே சாய்ந்து சிந்தனையில் ஆழ்ந்தான். சிந்தனை மிகுதியால் செயலற்று அப்படியே உறக்கத்தில் ஆழ்ந்தான். மெய் மறந்தான்.

### நாககன்னிகைக்கு ஆறுதல்

நடு இரவு நள்ளென்று இருந்தது. நகரம் அமைதியுடன் ‘ஓ’ என்று இருந்தது. மேகத்தினூடே மறைந்து மறைந்து இருளையும் நிலவையும் மாறி மாறி அளித்துக்கொண்டிருந்தான் பிறைச்சந்திரன். கருமேகங்களின் தொகுதி பிறைச்சந்திரனின் நிலவொளியைப் போர்த்துக்கொண்டிருந்தது. மருட்சியைக் கொடுக்கும் அந்நள்ளிரவில் கரு மேகத்தின் சாயை கலந்த நிலவொளி அங்கும் இங்கும் பாய்ந்து மேலும் மயக்கத்தை உண்டாக்கியது. அந்த நள்ளிரவில் உறங்காதவர்-

உறங்காதவை இல்லை என்றே சொல்லலாம்; களவு காணும் கள்ளரும் கண் மயங்கும் சமயம் அது. அதற்கு மாருகக் கடற்கரை அரண்மனையிலே அந்நள்ளிரவில் உறக்கம் என்பதே இல்லை. நாக நாட்டிலிருந்து வந்த வீரர் கூட்டத்தினரும், சேடியரும் ஒருங்கே ஒருபுறமாய்க் கூடியிருந்தனர். நீலன் நாககன்னிகையுடன் ஏதோ மெல்லக் கூறிக் கொண்டிருந்தான். அவள் அவன் வார்த்தைகளை ஏற்றுக் கொண்டோ, கொள்ளாமலோ ஏதோ கூறிக்கொண்டிருந்தாள். துயரம் ததும்பும் வார்த்தைகளை அவள் கூறிக்கொண்டிருந்தாள். அவ்வார்த்தைகளிலிருந்து அவள் உள்ளத் துயரை ஒருவாறு அறியலாம்; அவ்வார்த்தைகளில் புலப்பட்ட துயரப் பெருக்குக்கு ஒப்பாக அவள் கண்களும் நீர்ப்பெருக்கை வெளியிட்டிருக்க வேண்டும். ஏனே அவ்வளவு துயரம்? அவளுக்கு நீலன் ஆறுதல் கூறிக்கொண்டிருந்தான் என்றே தோன்றியது. சிறிது நாழிகைக்கெல்லாம் ஏதோ முடிவு செய்தவர்களாய் நாககன்னிகையுடன் யாவரும் புறப்பட்டனர். குதூகலத்தோடு நீலன் அவளைப் பின் தொடர்ந்தான்.

### காதலுக்கா? வஞ்சகத்துக்கா?

அந்த நள்ளிரவிலே நீலன் முதலிய வீரர்களும் நாககன்னிகையுடன் பல சேடியரும் சிறிதும் பேச்சில்லாமலும் ஆரவாரம் இன்றியும் கடல் துறையை நோக்கிச் சென்றனர். நீலன், பிறர் அறியாதவாறு ஆயத்தம் செய்திருந்த ஒரு துறைப்புறம்யாவரையும்அழைத்துச் சென்ருன். நீலனைப் பின்பற்றி ஒருவர்பின் ஒருவராக யாவரும் சென்றனர். நாககன்னிகை, இதயம் பிளவுற்றது போல் துடித்தவளாய், தயங்கித் தயங்கி நடந்து அவர்களைப் பின் தொடர்ந்தாள். அவள் நினைவு நெடுமுடிக் கிள்ளியிடமாகப் பதிந்திருக்க, அவள் கால்கள் நாட்டு யாத்திரை நிமித்தம் கடல் துறையை நோக்கிச் சென்றன. அவள் மனத்தே உறுதி ஒருபுறமும் காதல்களிமயக்கு ஒருபுறமுமாக நின்று அவளை அளவற்ற துன்பத்துக்கு உள்ளாக்கின. அரசனின் வஞ்சகம் ஒருபுறமும் அவன் காதல் மற்றொரு புறமுமாக அவள் இருதயத்தைப் புண்ணுறசெய்தன. 'வஞ்சகத்தை மன்னித்துக் காதலுக்கு அடிமையாவதா? காதலைத் தியாகம் செய்து வஞ்சகத்திற்கு மாருகப் பழி வாங்கி விரதம் கொள்வதா?' என்ற இரண்டில் எதைக் கொள்வது என ஊசலாடினாள். இரண்டும் அவளுக்கு இன்றியமையாததாக இருந்தன. ஆனல் நீலனின் பெருமுயற்சியால் பின்னதே அவள் கைக்கொண்டாள். அரசனின் வஞ்சகத்திற்கு மாருக அவனைப் பழிவாங்கவேண்டும் என்று உறுதி கொண்டாள். அந்த உறுதியோடே நடை தடுமாறியவளாய்க் கடற்கரையை அடைந்தாள்.

### நாககன்னிகையின் தடுமாற்றம்

அந்தக் கடற்றுறையில் அணி அணியாகப் பல தோணிகள் நீரில் மிதந்து கொண்டிருந்தன. பாய்விரித்த மரக்கலம் ஒன்று அவற்றின் நடுவே காணப்பட்டது. பாய்மரத்தின் உச்சியிலே நாகக்கொடி நெளிந்து கொண்டிருந்தது. கரையெங்கும் சிறிதும் அரவம் இன்றி அமைதியாக இருந்தது. நள்ளிரவாதலால் காவலர்கூட அந்தத் திசையிலே காணப்படவில்லை. நகர்த் துறைமுகத்தின் தெற்குக்கோடியில், மனித சஞ்சாரம் அற்ற துறையிலே யாரும் பார்த்துவிடுவாரோ என்ற அச்சம் சிறிதும் இல்லை. ஆனல், யாவரையும் விரைவில் தோணியில் ஏறி அமரும்படி வற்புறுத்திக்கொண்டே இருந்தான் நீலன். நாகநாடு போய்விட வேண்டும் என்ற தீவிரம் ஒருபுறமும், கிள்ளியைப் பிரிந்து வாழ்வதோ என்ற துயரம் ஒருபுறமும் அவள் மனதைக் கலக்கின. முடிவுசெய்ய இயலாதவளாய்க் கடலின் அமைதியையும், அதற்கு எதிராக நகரின் அமைதியையும் நோக்கி நோக்கித் தயங்கியவாறே தடுமாறி நின்ருள் நாககன்னிகை. வீரர்கள் யாவரும் தாம் கொணர்ந்த பொருள்களுடன் விரைவாகத் தோணிகளில் ஏறியமர்ந்தனர். சேடியர் பலரும் ஆடையாபர

ணங்களையெல்லாம் மரக்கலத்தில் ஏற்றித் தாமும் அமர்ந்து கொண்டனர். நாககன்னிகையின் வரவை நோக்கி அருகில் நின்றனர் கந்தியும் நீலனும்.

"பீலி, நாழிகையோ ஆகிவிட்டது. இந்த நள்ளிரவில் இவ்விடம் தாமதித்தால் காவலர் கண்டு கொள்வர். அதனால் பெருங்கேடு உண்டாகும் என்பதை நான் சொல்ல வேண்டுமா?" என்று பணிவோடு கூறினன் நீலன்.

### பேரின்பம் தந்தவரல்லவா?

வானில் கருமேகம் மறைத்தலால் ஒரு புறம் காரிருளும், ஒரு புறம் மங்கிய நிலவொளியும் தோன்ற, அந்த இருளும் நிலவும் கலந்த மருண்ட நிலையில், கடல் அலை சிறிதே குமுறி எழுவதைக் கண்டவாறே தன் செய்கையில் அச்சமும் அயர்வும் உடையவளாய் நின்றுள் நாககன்னிகை. அப்போது நீலன் கூறிய வார்த்தைகள் அவள் செவியில் விழவே சட்டென்று அவனை நோக்கினுள். அவன் முகத்தின் பொலிவைக் கண்டாள்.

"நீலா, இதோ புறப்பட்டு விட்டேன். இனி என் வாழ்க்கை வேருகிவிட்டது. ஒரு மாதம்!—ஏன்? ஒரு கணம் ஆனுல் தான் என்ன? என் வாழ்வில் கலந்து எனக்குப் பேரின்பம் தந்த காதலர் அவர்! அவருக்கு இப்போதாவது என் வணக்கத்தைச் சேர்ப்பிக்க வேண்டாமா?" என்று சொல்லிக் கொண்டே சோழன் அரண்மனையை நோக்கி வணங்கினுள். மீண்டும் அவனைக் கனிவோடு நோக்கிக் கூறலானுள்:

"நீலா! இந்த ஒரு மாதமும் ஒரு கணம்போல் ஓடிவிட்டதல்லவா? ஆனுல் இந்த ஒரு மாத வாழ்வு ஒரு நாளும் இனி மீண்டு வராது! இந்த ஒரு மாத வாழ்வின்பத்தை ஒருகாலும் மறக்க முடியாது. நீலா, இனி அவரை நான் காணப் போவதில்லை என்றே எண்ணுகிறேன். ஆனுல் அதனுல் ஏற்படப் போகும் துயரம் எனக்குமட்டுமா? அவர் வஞ்சகமே அவரைத் துன்பத்திற்கு உள்ளாக்கியது! ஐயோ நினைத்தாலும் என் உயிர் துடிக்கிறதே! என்வாழ்வு மலர்ந்துவாடிய மலர் போன்றதாகிவிட்டது இனி! இன்றுதான் நான் நாக நாட்டிலிருந்து வந்த அன்ருே என எண்ணுகிறேன். நீலா, இன்றுதான் நீயும் என் பழைய ஆருயிர் நண்பனுனுய். இனி என் வாழ்க்கையின் இன்ப துன்பங்களில் முன்புபோல் உனக்குப் பங்கு உண்டு. அன்றுபோல் என்றும் உன்னை, நான் அன்புடன் தோழனுகக் கருதுகிறேன்...நீலா, இந்தக் கோலத்தோடு நான் நாக நாட்டிற்குள் புகுவேனே என்று மயங்குகிறேன்!"

### கப்பல்கள் புறப்பாடு

நாககன்னிகையின் வார்த்தைகள் அதற்கு மேல் எழவில்லை. அலைத்துளியோ என்னும்படி, அவள் கண்களிலிருந்து நீர்த்துளி சிதறின. இருதயத் துடிப்பும் பெருமூச்சும் அவளுக்குப்பெருஞ் சோர்வை உண்டாக்கியது. கந்தியின் கைகளை ஊன்று கோலாகக் கொண்டு மரக்கலத்திலே ஏறி மஞ்சத்தில் அமர்ந்தாள். நீலன் சட்டென்று மரக்கலத் தட்டிலே பாய்ந்து அதைச் செலுத்தினுன். வீரர்களுக்கும்கட்டளையிட்டான். அன்னப் பறவைகளின் கூட்டம் போல் தோணிகள் அலைமேல் தவழ்ந்து மோதி எதிரிட்டுச் சென்றன. மற்றத் தோணிகளின் நடுவே, நாககன்னிகையின் மரக்கலம் அம்புபோல் பாய்ந்து சென்றது. சிறிது நாழிகைக்கெல்லாம் தோணிகள் கடலில் நெடுந்தூரம் சென்று விட்டன. காவிரிப்பட்டினத்தைநோக்கியவாறே கண்ணீர் சொறிந்தாள் அவள். மெய் சோர்ந்து பதுமைபோல் அசைவற்றுள். நகரம் கண்களுக்குத் தோன்றும் வரையில் அவள் கண்கள் திறந்திருந்தன. நகரின் உருவம் மங்கிமறைந்து எங்கும் கடற்பரப்பே தோன்றும் அளவு வந்தவுடன் அவள் கண்கள் தாமாகவே மூடிக்கொண்டன. அவளது மாந்தளிர் மேனியைக் கந்தி தாங்கிக்கொண்டாள். நீலன் கம்பீரத்தோடும் குதூகலத்தோடும் மரக்கலத்தைக் கடிதாகச் செலுத்துவதிலே முற்பட்டிருந்தான். உடல் சோர்ந்து உணர்விழந்து கந்தியின்மடியிலே சாய்ந்து கொண்டாள் அவள். மலர் போன்ற அவள் மேனியைத் தைவந்தவாறே சுற்றிலும் அமர்ந்தனர் பணிப்பெண்கள். மணம் மிகுந்த மலரைச் சுற்றும் கருவண்டுபோல் நீலன் நாககன்னிகையின் புறமாகச் சுற்றிக் கொண்டிருந்தான். அவன் நோக்கம் என்ன என்பதை யாரே அறிவார்?

(தொடரும்)

## சாமந்தி

(14-ம் பக்கத் தொடர்ச்சி)

இவன் தான் என்னையும், என்னுடன் இருக்கும் காந்தி என்ற என் தோழியையும், புருவாயிருந்த போது கொஞ்சமும் இரக்கமில்லாமல் அம்பினால் கொன்றவன். இவன் புருக்களாயிருந்த எங்களைக் கொன்றதும், வெறிபிடித்த காட்டானையொன்றால் கொல்லப்பட்டான்...” என்று முதலில் பதிலளித்த பெண்ணாகிய சாமளா கூறி முடிக்கு முன், பாமா “நீங்கள் தான் புருவாயிருந்து மரணமடைந்தீர்களே! அப்படியிருக்க எப்படி உங்களுக்கு வேடன் காட்டானையால் கொல்லப்பட்டான் என்பது தெரியும்?” என்று வியப்புடன் கேட்டாள்.

“பாமா! நீ கேட்பது வாஸ்தவமே. நாங்கள் இருவரும் கந்தர்வ ஸ்திரீகள். ஒரு நாள் நாங்கள் இருவரும் கந்தர்வ லோகத்தை விட்டு, பூலோகத்தைப் பார்ப்பதற்காக ஒருவரிடமும் சொல்லிக் கொள்ளாமல் புரு உருவெடுத்து வந்தோம். வரும்போது ஒரு அழகிய சோலையைக் கண்டோம். அதன் இயற்கை யழகும், குளிர்ச்சியும் எங்களைப் பரவசப்படுத்தின. ஆதலால் நாங்கள் இருவரும் சாதாரண மானிட ஸ்திரீகளாக எங்களை மாற்றிக்கொண்டு அந்த சோலையில் அந்தி வேளையில் இன்பமுடன் உலாவிய வண்ணம், அதன் எழிலைப் பருகிக் கொண்டிருந்தோம். அவ் வேளையில் அந்த நந்தவனத்திற்குரிய அரசிளங் குமாரனொருவனும் உலாவ வந்தான். எங்களைக் கண்டதும் ‘நீங்கள் யார்? யாருடைய அனுமதியின் பேரில், எனக்குச் சொந்தமான இச் சோலைக்கு வந்தீர்கள்?’ என்று கேட்டான். நாங்கள் எங்களுக்கு அச்சமயத்தில் தோன்றிய ஒரு காரணத்தை கூறி அதை விட்டு வெளியேற யத்தனித்தோம். ஆனால் அவ்வரச குமாரன் ‘நீங்கள் எனக்குத் தெரியாமலும், என்னுடைய அனுமதியில்லாமலும் இங்கு வரத்தான் வந்தீர்கள். என்னுடன் சிறிது நேரம் சந்தோஷமாக இருந்துவிட்டுப் போக வேண்டும். பந்து விளையாடவும் வேண்டும்.” என்று வேண்டினான். நாங்களும் அதற்கு உடன்பட்டு அவனுடன் ஒரு ஆட்டம் ஆடிக் கொண்டிருந்தோம். அப்பொழுது எங்களுடைய அரசி அங்கு தோன்றி கோபத்துடன் எங்களை புருக்களாகவும். அரசகுமாரனை (எங்களுடன் சேர்ந்து விளையாட்டில் பங்கெடுத்துக் கொண்ட குற்றத்திற்காகவோ, என்னவோ!) ஒரு வேடனாகவும் சபித்து எங்களைப் பார்த்து, என் உத்திரவில்லாமலும், எனக்குத் தெரியாமலும் நம்முடைய இருப்பிடத்தை விட்டு புரு உருவெடுத்து இங்கு வந்த உங்களை நான் மறுபடியும் புருக்களாகவே மாற்றுகிறேன். நீங்கள் உங்கள் இஷ்டப்படி எங்கு வேண்டுமானாலும் பறந்து செல்லுங்கள். கந்தர்வ ஸ்திரீகளாகிய உங்களுடன் சேர்ந்து ஆட்டத்தில் கலந்து கொண்டதற்குத் தண்டனையாக வேடனுருக்கொண்டு கண்ட இடங்களிலும் திரியட்டும். இவன் கொஞ்ச காலம் கழித்து அவ்வேடன் புரு உருவுடன் இருக்கும் உங்களைக் கொல்லுவான். நான் வேடனுடைய உயிரை ஒரு யானையாக வந்து கவருவேன். அப்பொழுதுதான் உங்களுக்கு சாப விமோசனம், என்று கூறி மறைந்தாள். எங்களுக்கு நடக்கப் போகும் சம்பவங்கள் முன்னதாகவே தெரியுமாதலால், நாங்கள் புரு ரூபத்தில் இறந்த பின்னும் நடந்த சமாசாரத்தை உனக்கு இப்பொழுது கூறினேன். இறந்த புருக்களைத் தொட்டதும் எங்கள் சாபம் நீக்கப் பெற்று சுய உருவம் அடைந்தது போல், வேடனையும் நீ தொட்டால் அவன் தன் இயற்கையான அரச ரூபத்தை அடைவான். ஆதலால் நீ அவனையும் எழுப்பு” என்று சாமளா கூறினாள்.

அவள் கூறிய வார்த்தைகள் அனைத்தையும் கேட்ட பாமா வியப்புடனும் ஆவலுடனும், வேடனை எழுப்பினாள். மறு நிமிஷமே வேடன் ஓர் உயிருள்ள அரசிளங்குமாரனாக மாறினான்.

காந்தி அரச குமாரனுக்கு தன் வரலாறு முழுவதையும் கூறிய பின் “இளவரசே! உனக்கு சுய ரூபமுண்டாக்கிய இவளையே (பாமாவைச் சுட்டிக் காட்டி) உன் ராஜ்யத்திற்கு அழைத்துச் சென்று மணம் செய்து கொண்டு சுகமாய் வாழ்வாயாக” என்று

அரசகுமாரியிடம் கூறிய பின் பாமாவைப் பார்த்து "குழந்தாய்! நற்குணங்களும், அழகுமுள்ள இவ்விராஜ புத்திரனை கல்யாணம் செய்து கொள்ள உனக்கு சம்மதம்தானே?" என்று கேட்டாள்.

அச்சமயத்தில் அங்கு வந்தாள் பாமாவின் வளர்ப்புப் பாட்டி. அவளிடம் நடந்த சமாசாரங்கள் முழுவதையும் கூறி காந்தி கடைசியாகக் கூறியதையும் சொன்னாள் பாமா.

பாட்டி ரொம்பவும் சந்தோஷமடைந்து "உன் நற்குணத்திற்கும், விவேக புத்திக்கும் ஏற்ப நல்ல புருஷனை-அதுவும் ஒரு ராஜகுமாரனை-அடைய கடவுள் கிருபை செய்திருக்கிறார். நீ அவனையே கல்யாணம் செய்து கொண்டு சௌக்யமாயிரு" என்று ஆசீர்வதித்து ராஜகுமாரனின் அபிப்பிராயத்தையறிய அவனை நோக்கினாள்.

"பாட்டி! என்னைப்பற்றி சந்தேகப்பட வேண்டாம். உங்கள் அருமைப் பேத்தி எனக்குச் செய்த இப்பேருதவிக்கு நான் எதையும் பிரதியென்று நினைத்துச் செய்யமுடியாது. இவளை விவாகம் செய்து கொள்ள நான் எவ்வளவு பாக்கியம் செய்திருக்க வேண்டும்?" என்று கூறியவண்ணம் கடைக்கண்ணால் "உன்னபிப்பிராயம் என்ன?" என்று கேட்பதைப் போல் பாமாவை நோக்கினான்.

அரசகுமாரனின் பார்வையின் அர்த்தத்தை உணர்ந்துகொண்டவள்போல் பாமா புன்முறுவலுடன் கீழே குனிந்தாள்.

பாட்டி உடனே அவர்களுடைய கருத்தை உணர்ந்து இருவருடைய கரங்களையும் ஒன்று சேர்த்து வைத்து ஆசீர்வதித்தாள்.

காந்தி "பாமா! நீ எங்களை வலையினின்றும் விடுவித்துக் காப்பாற்றிய உனக்கு நாங்கள் என்றும் கடமைப்பட்டுள்ளோம், உனக்கு வேண்டியதைக் கேள்" என்றாள்.

பாமா "தேவி! நீங்கள் இப்பொழுது எனக்குச் செய்திருக்கும் உபகாரத்திற்கு நானல்லவோ என்றைக்கும் உங்களுக்கு கடன்பட்டவள்? அப்படியிருக்க நீங்கள் இம்மாதிரி சொல்வது தகாது......உங்கள் ஞாபகார்த்தமாக ஏதாவது கொடுங்கள்" என்றாள்.

இதைக் கேட்ட சாமளாவும் காந்தியும் தங்கள் தலையில் சூடிக் கொண்டிருந்த புஷ்பங்களிலிருந்து ஒவ்வொரு புஷ்பம் எடுத்து பாமாவிடம் கொடுத்து "இவைகளை எங்கள் ஞாபகார்த்தமாய் வைத்துக்கொள், இவைகளில் ஒன்றை நீ தலையில் வைத்துக் கொள், மற்றொன்றை தோட்டத்தில் பூமியின் மேல் போட்டால், உடனே அது ஒரு புஷ்பச் செடியாக மாறும். அது புஷ்பிக்கும் மலர்களை பிரதி தினமும் எங்கள் நினைவாக சூட்டிக்கொள் எங்கள் பிரிவுக்காக வருந்தாதே. நீ எங்களைப் பார்க்க விரும்பும்போது மனதினால் நினைத்தால் நாங்கள் வந்து உனக்கு வேண்டுவதைச் செய்கிறோம். உனக்கு சர்வ மங்களம் உண்டாகட்டும்" என்று கூறி மறைந்தனர்.

பாமாவும் அவர்கள் கூறிய படியே புஷ்பங்களை அபிவிருத்தி செய்தாள். சாமளா காந்தி இருவரும் கொடுத்த அம்மலருக்கு சாம(ளா)+(கா)ந்தி என்று பொருள்பட சாமந்தி என்று பெயரிட்டாள்.

சிலதினங்கள் சென்ற பிற்பாடு அரசகுமாரருக்கும், பாமாவுக்கும் சிறப்பாக விவாஹம் நடைபெற்றது. கந்தர்வ ஸ்திரீகள் இருவரும் அவ்வைபவத்திற்கு வந்திருந்து வாழ்த்துகள் கூறினார்கள். கிழவியும் அவர்களுடனிருந்து சௌக்யமாக காலங் கழித்தாள்.

சிறுவர் கதை

# பால்கன்-ஜீ-பாரீ

★

## பட்டம் விட்ட ஆட்டுக்குட்டி

★

சகோதரி கௌரி, 11-வயது
திருவனந்தபுரம்.

ஒரே ஒரு ஊரிலே ஒரு ஆட்டுக்குட்டி இருந்தது. அதற்கு பள்ளிக்கூடம் என்றாலே தலைவலி வந்து விடும். விளக்கெண்ணெய் சாப்பிடுவது எவ்வளவு வெறுப்பாயிருக்குமோ, அவ்வளவு அருவருப்பாயிருந்தது அதற்கு பாடம் படிப்பதும். அது ஒழுங்காகப் படிக்காததனால் தான் இரண்டு வருஷங்களாக நான்காவது வகுப்பிலேயே இருக்க நேர்ந்தது. அதன் தாயார் எவ்வளவோ சொல்லுவாள். ஆனாலும் அதற்குப் புத்தி வரவில்லை.

ஒரு நாள் அந்த ஆட்டுக்குட்டிக்கு பாடசாலைக்குப் போகவே தோன்றவில்லை. "அம்மா, எனக்குத் தலைவலி. பள்ளிக்கூடத்துக்குப் போகவில்லை" என்று தாயிடம் போய்ச் சொல்லிற்று. அதன் தாயாரும், "சரி, போய் படுத்துக்கொள்" என்று சொல்லி விட்டாள். ஆட்டுக்குட்டி சிறிது நேரம் படுக்கையில் படுத்துக்கொண்டிருந்து விட்டு, அம்மா சாப்பிடும் சமயம் பார்த்து குளத்தங்கரைக்கு நழுவி விட்டது. குளத்தங்கரையிலே தன் நண்பன் கழுதைக்குட்டி பட்டம் விட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்தது. வெகு சந்தோஷத்தோடு அதுவும் விளையாட்டில் கலந்துகொண்டது. கழுதைக் குட்டியும் ஆட்டுக்குட்டியும் அவ்வாறு சந்தோஷமாக பட்டம்விட்டுக் கொண்டிருக்கும்போது தாய் ஆடு அங்கே வந்தது. அதைக் கண்டது ஆட்டுக்குட்டி. உடனே எடுத்தது ஓட்டம் வீட்டிற்கு. தாய் வருவதற்கு முன்பாகவே சிலேட் புத்தகங்களை எடுத்துக்கொண்டு பள்ளிக்கூடத்திற்கு ஓடிற்று.

அன்று வகுப்பில் கரடி வாத்தியார், பட்டத்தைக் குறித்து ஒரு சிறிய வியாசம் எழுதச் சொன்னார். என்ன எழுதுவதென்று தெரியாமல் எல்லாரும் விழித்தார்கள். ஆட்டுக்குட்டி மாத்திரம், தான் குளத்தங்கரையில் பட்டம் விட்டதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு அழகான ஒரு வியாசம் எழுதிற்று. அந்த வியாசத்திற்கு கரடி வாத்தியார் நூறுக்கு நூறு மார்க்கு கொடுத்து விட்டார்! ஆட்டுக்குட்டி சந்தோஷம் தாங்காமல் வீட்டிற்கு வந்து தாயிடம் சொல்லிற்று. தாய் அதன் மீது கொண்டிருந்த கோபம் அப்போது பறந்தேபோயிற்று.

நூறு மார்க்கு கிடைத்ததிலிருந்து அந்த ஆட்டுக்குட்டியின் சுபாவமும் மாறிற்று. தவறாமல் அது பாடசாலை போக வாரம்பித்தது. விளையாட வேண்டிய வேளைகளில் விளையாடுவதையும், படிக்கவேண்டிய நேரங்களில் படிப்பதையும் வழக்கமாகக் கொண்டது. அந்த வருஷக் கடைசியில் அதுவே வகுப்பில் முதலாகத் தேறியது.

### சென்ற வார கேள்விகளுக்கு விடைகள்

(1) ரவிந்திர நாத் டாகூர், பண்டித மோதிலால் நேரு.

(2) அங்காடியங்கள் முறையே அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஜப்பான், ஜெர்மனி, ரஷ்யா இந்த தேசங்களில் உபயோகிக்கப்படுகின்றன.

(3) மிஸ்ஸிஸிப்பி, எவரெஸ்ட், லண்டன்.

(4) ஔவையார், சமண முனிவர்கள், அதிவீர ராம பாண்டியர்.

(5) அவ்வடிகள் முறையே நல்வழி, வாக்குண்டாம் என்ற நூல்களிலிருந்து எடுக்கப்பட்டுள்ளன.

(6) மரம் கெடாமலிருப்பதற்காக.

(7) நடனம், விஞ்ஞானம், இலக்கியம், கணிதம், ஓவியம் இந்தத் துறைகளில் புகழ் பெற்றவர்கள்.

## ஒரு சிறிய கணக்கு

★

சகோதரன் வரதராஜன்
14-வயது நாமக்கல்

நதிக்கரையோரத்தில் ஒரு ஆலமரத்தில் உட்கார்ந்திருந்த குருவி ஒன்று தலைக்கு மேலே பறந்து சென்ற குருவிகளைப் பார்த்து, "மேலே பறக்கும் நூறு குருவிகளா, எங்கே போகிறீர்கள்?" என்று கேட்க அந்தக் குருவிகள் "நாங்கள் நூறு பேரல்ல. எங்களைப் போல் இரண்டு மடங்கும், எங்களில் பாதியும், அதில் பாதியும், நீயும் சேர்ந்தால் நூறு குருவிகளாகும்" என்றன. ஆகாயத்தில் பறந்து சென்ற குருவிகள் எத்தனை?

விடை:-முப்பத்தாறு குருவிகள்.
சகோதரன் ஹரி.

## அட்டைப் படம்

★

"என்னுடைய கிராமம்" என்ற ஹிந்திப் படத்தில் தோன்றும் ஸ்ரீமதி ஹன்ஸா.





சமீபத்தில் கல்கத்தா தென்னிந்திய ஸ்திரீகள் சங்கத்தில் குழந்தைகள் உல்லாஸ உடைகள் தரித்து வேஷம் புனைந்துகொண்டனர். அவ்வைபத்தில் எடுத்த படம். (வலது) லெனின் கிராடு முனையில் ரஷ்யப் படைக்குத் தலைமைத்தாங்கும் ஜெனரல் கோவோராவ்.



இத்தாலியிலுள்ள இந்தியப்பீரங்கிப்படையினர் புதிய இடங்களில் பீரங்கிகளை அமைக்கின்றனர். ஜெர்மன் படைவரிசையைத் தகர்த்த பின்னர் இந்த ஏற்பாடு செய்யப்பட்டது.





ரஷ்யாவில் லெனின்கிராடு முனையிலே மற்றொரு தலைவர் ஜெனரல் மெரிட்ஸ்காவ். (வலது) வங்கப் பஞ்சத்தை அடுத்து வந்த நோய்களுக்கு இந்திய ராணுவ வைத்தியப்படை பலவித உதவி செய்தது. ஒருவருக்கு காலரா இஞ்சுலேஷன் செய்யப்படுகிறது.

Printed and Published by T. S. Visvanatha Iyer, B. A., at the "Swadesamitran" Power Press, Mount Road, Madras.—*Editor*: C. R. Srinivasan, B. A.